உ

# தமிழ்ப் பொழில்.

தஞ்சை, கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் சு | பிரமோதூத புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை. | மலர் சு, எ, அ. |
|---|---|---|

## தமிழ் நாடும் தமிழ் நாட்டு வழக்கவொழுக்கங்களும்.

### இல்லறவாழ்க்கை.

திருவாளர் ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்,
தமிழ்ப்புலவர், மன்னார்குடி.

1. மக்கட்பிறவியின் அருமை.

எவ்வுலகத்தினும் உள்ள எப்பொருள்களும், உயிருடைப் பொருளும் உயிரிலாப் பொருளுமென இருவகைப்படும். உயிர் என்பது அறியுந்தன்மை யுடையது. உயிரிலாப் பொருளுக்கு அறிவில்லை. அறிவு என்றாலும் உணர்வு என்றாலும் ஒக்கும். உயிருடைப் பொருள்கள் பிறப்புவகையால் எழுவகைப்படும். அதுவே பிறக்கும் இடத்தின் வகையால் நால்வகைப்படும். அறிவு வகையால் அறுவகைப்படும். பிறப்புவகை எழாவன—தாவரம், ஊர்வன, நீர்வாழ்வன, பறவை, விலங்கு, மக்கள், தேவர் என்பன. பிறப்பின் இடவகை நான்காவன—நிலம், வியர்வை, முட்டை, கருப்பை என்பன. அறுவகை அறிவாவன—உடம்பினுணர்ச்சியும் நாவின் உணர்ச்சியும், மூக்கின் உணர்ச்சியும்,

கண்ணின் உணர்ச்சியும், காதின் உணர்ச்சியும், மனதின் உணர்ச்சியுமாம். இங்ஙனம் அறுவகையாக உயிர்களைப் பகுத்துக் கொண்டவர் தமிழ் இலக்கண நூலார். இதனை,

'ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே' என்னும்

தொல்காப்பியச் சூத்திரத்தால் அறிக.

புல் மரம் முதலியன தோன்றி வளர்ந்து அழியும்; உடலால் ஊறு மாத்திரம் உணரும். ஆகவே அவை ஓரறிவுயிர் எனப்படும். நத்தை கிளிஞ்சில் சிப்பி முதலியன உற்றறிவதோடு சுவை அறிவும் உடையன. அவை ஈரறிவுயிர் எனப்படும். கறையான் எறும்பு முதலியன உடலறிவும் நாவின் அறிவும் மூக்கின் அறிவும் உடையன. ஆதலால் அவை மூவறிவுயிராம். நண்டு வண்டு முதலியன அம் மூவறிவோடு கண்ணால் பார்த்தறிதலும் உடைமையால் நாலறிவுயிராம். விலங்கு, கிளி முதலிய பறவைகள், பாம்பு முதலியன அந் நாலறிவோடு செவியால் கேள்வியறிவும் உடைமையால் ஐயறிவுயிரெனப்படும். மக்கள் எனப்படுவார் அந்த ஐவகை அறிவோடும் மனவுணர்வும் உடைமையால் ஆறறிவுயிர் எனப்படுவர். இதனை,

'புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே.'
'நந்து முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.'
'சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.'
'நண்டும் தும்பியும் நாலறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.'

'மாவும் மாக்களும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.'
'மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.' என்னும்

தொல்காப்பியச் சூத்திரங்களால் அறிக.

ஓரறிவுயிரெனச் சொல்லப்பட்டுள்ள புல் என்பது உலக வழக்கில் சொல்லப்படும் புல் அன்று. மரங்களை உள்ளே வயிர முள்ளன வென்றும் புறத்தே வயிரம் உள்ளன வென்றும் இருவகைப்படுத்தி, பனை தெங்கு மூங்கில் முதலியனபோலப் புறத்தே வயிரமுள்ளவற்றைப் புல் என்றும், பூவரசு பலா மா முதலியனபோல அகத்தே வயிரமுள்ளவற்றை மரம் என்றும் சொல்லுதல் செய்யுள் வழக்கு. உலக வழக்கில் வரும் புல் என்பது 'பிறவும்' என்பதனுள் அடங்கும்; அதற்குப் புறத்திலும் வயிரமில்லை அகத்திலும் வயிரம் இல்லை. நத்தை, சிப்பி, கிளிஞ்சில் இவற்றுக்கு வாயுண்டு. கடிக்கும் இயல்புடையன; மூக்கு இல்லை. எறும்புக்குக் கண்ணில்லை; காதும் இல்லை; மூக்கு உண்டு. தேனோ நெய்யோ எங்கிருந்தாலும் நாற்றம் உணர்ந்து சென்று அதனைப் பற்றிக்கொள்ளும்,

'ஆகா தெனினும் அகத்துநெய் உண்டாகில்
போகாதெறும்பு புறஞ்சுற்றும்' (நாலடி.)

ஆயினும் கண்ணில்லாமையால் தான் குறித்தபொருளை நேரே போய்ப் பற்றுமல், அங்கும் இங்கும் திரிந்து தடுமாறிப் பின்னர் மணத்தின் வழிச்சென்று அப்பொருளைப்பற்றும். எறும்பு தனித் தனியாய் ஊர்ந்து செல்வதில்லை. காதும் கேளாத குருடன் ஒருவன் முன்னே கோலூன்றித் தட்டித்தடுமாறி, மேடு பள்ளம் கண்டு வழிகாட்ட அவ்வழியே பின்னே பல குருடர் சென்றாற் போல, எறும்புகள் ஒன்றன்பின் ஒன்றாகக் கூட்டமாகச்செல்லும். கையால் தட்டி ஓட்ட முயன்றாலும் ஓடுவதில்லை, ஆகையால் கண்ணோடு காதும் அதற்கில்லையென்றறிக. ஆயினும் மூக்கினால் மணம் அறியும் ஆற்றல் எறும்புக்கு அமைந்திருப்பதுபோல மக்கட்கு அமையாமை வியக்கத்தக்கது.

அட்டை மூவறிவுயிர். எலும்பில்லாத புழுவோ ஓரறிவுயிர்; ஈரறிவுடைய புழுக்களும் உள.

நண்டிற்குக் கண் உண்டு, அதன் கண்ணுக்கு, வேம்பின் அரும்பும் நொச்சி யரும்பும் யாழின்பத்தரில் முடுக்கு கின்ற ஆணியும் (Pin) உவமையாகச் சங்க விலக்கியங்களிலே கூறப்பட்டுள்ளன.

'வேப்பு நனையன்ன நெடுங்கண் ஈர்ஞெண்டு' (அகம்-125)

'நொச்சிமா வரும்பன்ன கண்ண,
எக்கர் ஞெண்டின் இருங்கிளை' (நற். 267)

'அளைவா ழலவன் கண்கண் டன்ன,
துளைவாய் தூர்ந்த துரப்பமை ஆணி' (பொருநர்.)

நண்டிற்கு மூக்கும் உண்டு. இரண்டு மூக்கு இரண்டு கண்ணையும் ஒட்டிச் சிறிது கீழாக வாய்க்குமேலாக அமைந்துள்ளன. இவ் வுண்மை உணர்ந்தே தொல்காப்பியனார்

'நண்டும் தும்பியும் நாலறி வினவே'

என்று கூறினர். அது கண்டுவைத்தும், பவணந்தியார் நன்னூலில் 'தும்பி வண்டாதி கண்ணறிவின் நாலறிவுயிர்' என்ற சூத் திரத்தில், நண்டை ஒழித்து வண்டைச் சேர்த்துக்கொண்டு ஓதினர். நண்டிற்கு மூக்கில்லையென்பது இவர் கருத்துப்போலும். தொல்காப்பிய வுரையாசிரியராகிய பேராசிரியரும் 'நண்டிற்கு மூக்குண்டோவெனின், அது ஆசிரியன் (தொல்காப்பியர்) கூற லான் உண்டென்பது பெற்றும்' என்று நெகிழ்ந்துரை கூறிப் போந்தார். பண்டைக் காலத்திலே, மரம் மலர் பறவை விலங்கு முதலியவற்றைச் சங்கப்புலவர் புனைந்துரைக்கும்போது அப் பொருளுக்கு வடிவும் நிறமும்பற்றி ஒப்புடைப் பொருளையே உவமையாகக் காட்டித் தம் உலகியல் ஆராய்ச்சியை விளக் கினர்.

'மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்
இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்.' (பெரும்பாண் 166)

இதிலே தினையரிசிச்சோற்றுக்கு நண்டின் குஞ்சுகளை உவமை யாகக் காட்டினர் உருத்திரங்கண்ணனார் என்னும் அந்தணர்.

அவரே, 'மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன
கவைத்தாள் அலவன் அளற்றளை சிதைய' (பெரும்பாண் 207)

எனவும் கூறி, நண்டின் காலுக்குக் கொல்லன் குறட்டை உவமை யாகக் காட்டினர்.

ஐங்குறுநூற்றில், கள்வன்பத்துப் பாட்டில், நண்டின் இயல்பு ஓரம்போகியார் என்னும் நல்லிசைப்புலவரால் புனைந்து உரைக்கப்பட்டுள்ளது. 'தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வன்' என்று அவர் கூறுகின்றார்—இதனால் நண்டு குஞ்சுகளைப் பொரித்தவுடனே வயிறுவெடித்து இறக்கும் என்பதை உணர்த்துகின்றார். புள்ளிக்கள்வன் என்பதனால் நண்டிற்குப் பொறியுண்டென்று உணர்த்துகின்றார். நண்டு நெல்லின் முளையை அறுக்கும்; நெல்லின் கதிரை அறுக்கும்; நெல்லின் பூவை அறுக்கும்; ஆம்பலை அறுக்கும்; வள்ளையை அறுக்கும்; வயலைச் செங்கொடியை அறுக்கும்; முள்ளிவேரின்கீழ் வளையுட் புகும். நெல் முதலியவற்றை வளையுட்சேர்க்கும். நண்டை ஓட்டி மகளிர் விளையாடுவர்—என்று இப்படியெல்லாம் அவர் கூறியுள்ளார். 'பொங்குதிரை பொருத வார்மண லடைகரை' என்னும் நற்றிணைப்பாட்டில், கடற்கரையில் வீழ்ந்துகிடந்த நாவற்கனியை, வண்டு தன்இனமென்றுதழுவ, அதனை நண்டு போய்ப்பற்றிக் கொள்ள, நாரைவரவும் ஓடிப்போயிற்று என்று கூறப்பட்டுள்ளது. இப்படி இச்சங்கப் புலவரெல்லாம், நண்டின் இயல்பையெல்லாம் பழகிப்பார்த்தே கூறினரென்பதில் ஐயமில்லை. ஆகவே அச்சங்கப்புலவர்க்கு இலக்கணநூல் வகுத்த தோல்காப்பியனார் அவ்வியல்பெல்லாம் பாராமலிருப்பரோ?. நன்னூலார் நண்டு முதலிய உயிர்ப்பொருள்களைச் சங்கப் புலவர்கள்போல உற்றுநோக்கும் தன்மையிற் குறைபாடுடைய ரெனவே காட்டினரெனக்கொள்க.

எமக்கு அரியநட்பினராகிய, நற்றிணைஉரையாசிரியர், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் என்பார், நண்டிற்கு

மூக்குண்டோ இல்லையோ என்னும் ஆராய்ச்சியை எழுப்ப, பாதவரைக்கொண்டு நண்டைக் கொணர்வித்துப் பரிசோதித்துப் பார்த்ததில், அதற்கு மூக்குண்மை கண்டுகொள்ளப்பட்டது. அப்பெரியாரது அரிய ஆராய்ச்சி முறைகள் இத்தகையன மிகப்பல.

நச்சினார்க்கினியர் கொண்டபாடமும் 'ஞண்டும் தும்பியும் நாலறி வினவே' என்றதே. பெரும்பாணாற்றுப்படையிலே, 'பல் காற் பறவை கிளைசெத் தோர்க்கும்' என்புழி, நச்சினார்க்கினியர் உரையின் மேற்கோளாக 'வண்டும் தும்பியும்' என்ற பாடம் காட்டப்பட்டுள்ளது. இது பதிப்பித்தாருடைய தவறு. அதனை 'நண்டுந் தும்பியும்,' என்றே திருத்தல்வேண்டும். 'நண்டுந் தும்பியும்' என்பதே நச்சினார்க்கினியர் கொண்டபாடம் என்பது,

> மங்கைநல்லவர் கண்ணும் மனமும்போன்று
> எங்கும் ஓடி இடரும் சுரும்புகாள்
> வண்டுகாள் மகிழ் தேனினங் காள்மது
> உண்டு தேக்கிடும் ஒண்ஞிமி றீட்டங்காள்—என்னும்

சிந்தாமணிச் செய்யுளுக்கு அவர்கூறிய உரையால் துணிந்து கொள்ளப்படும்.

இனி, வண்டிற்குச் செவியறிவை ஒழித்து மற்றை நான்கறிவே உண்டென்று தொல்காப்பியனார் வரையறுத்திருப்பவும், பேராசிரியரும் அப்படியே உரைகூறிப்போந்தார் ஆகவும், நச்சினார்க்கினியரோ அன்னாது நுண்ணிய அறிவின் கடலைத் தாண்டிச் செல்லும் கருத்துக்கொண்டு, வண்டிற்குச் செவியறிவும் உண்டென்று புதிய உரைவிரித்து, சங்கத்துச்சான்றோர் செய்யுள்களில் அதற்கு மேற்கோள் காணப்பெறுவதனால், அதுவே ஆசிரியர் தொல்காப்பியனார்க்கும் கருத்தென்றும், அது 'வாராதது கொண்டு வந்தது முடித்தல்' என்னும் தந்திர வுத்தியால் கொள்ளப்படுமென்றும் கூறுவாராயினர். அவர் காட்டிய மேற்கோள் அகநானூற்றில் 'முல்லைவைந் நுதிதோன்ற' என்னும் செய்யுளில்,

பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரன்
உவக்காண் டோன்றும் குறும்பொறை நாடன்' என்

பது. இது வினைவயிற்பிரிந்த தலைவன் மழைக்காலத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிப்போனபடி மழைபெய்தலும், குதிரைகளை முடுக்கித் தேரில் வருகின்றான் ஆகவே நீ வருந்த வேண்டாமென்று, தலைவியைத்தோழி வற்புறுத்தி ஆற்றியதை உரைப்பது. இவ்வாறு ஆற்றுவிக்கும் தோழி, தேரன் இதோ வந்துவிட்டான் என்றால், தேரின்மணியொலி கேளாதோ என்று தலைவி ஐயமுறாமல், வழியிலே ஆண்வண்டுகள் பெடையோடு கூடியிருத்தலைக் கருதி, மணியொலிகேட்டால் அவற்றின் கூட்டத்திற்குக் கெடுதி உண்டாகுமென்று தலைவன் அஞ்சி, மணிகளின் நாக்களைக் கட்டிவிட்டான் என்று தோழிசொல்லுகிறாள். இவ்வாறாகச் செய்யுளியற்றிய குறுங்குடிமருதனார் என்னும் நல்லிசைப்புலவர், வண்டிற்குச் செவியறிவு உண்டென்று கொள்ளவைத்தார் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இன்னும் அவர் அக்கருத்துக் கொள்வதற்கு ஆதாரமாக இருந்தது, உருத்திரங்கண்ணனார் என்னும் நல்லிசைப் புலவர் பாடிய பெரும்பாணாற்றுப்படையிலே

குமிழின், புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சிப்
பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்
புல்லார் வியன்புலம் போகி' என்பது.

இதனில் 'முல்லைநிலத்தில் ஆயர்கள் குமிழமரத்தின் கோட்டில் மரல் நாரைக்கட்டி யாழாக்கி விரலால் தெளித்து வாசிக்கும் குறிஞ்சி என்கிற பண்ணை வண்டானது தன்இனத்தின் குரலென்று கருதிச் செவிகொடுத்துக் கேட்கும்' என்று கூறப்பட்டுள்ளது. இன்னும் சிந்தாமணி குணமாலையார் இலம்பகத்தில் 'மங்கைநல்லவர் கண்ணும் மனமும் போன்று

எங்கும் ஓடிஇடரும் சுரும்புகாள்' என்றவிடத்திலே குண மாலையும் சுரமஞ்சரியும் தான்றான் அரைத்த சுண்ணமே உயர்ந்த தென்று மாறுபட்டு, சீவகனை அவ்விரண்டில் யாது உயர்ந்ததோ அதைத் தெரிவிக்குமாறுவேண்ட, அவன் வண்டுகளை விளித்து எது நல்லதோ அதை நீங்கள் உண்டு தெரிவிப்பீரென்று சொல்லி, இருவர் சுண்ணங்களை விண்ணில் தூவினுகை, வண்டுகள் அதைக்கேட்டு வந்து குணமாலை சுண்ணத்தைக் கவர்ந்துண்டன. சுரமஞ்சரிசுண்ணம் கீழே விழுந்துவிட்டது என்று கதை சொல்லப்படுகின்றது. இதனாலும் வண்டுகளுக்கும் பாடை உண்டென்றும், செவியறிவும் உண்டென்றும் நச்சினார்க்கினியர் கொண்டார். இந்த விடத்தில் அவர் எறும்பிற்கும் ஒரு பாடை உண்டென்று சாதிக்க முயன்றார். ஆயினும், வண்டுகள் சீவக னுக்குப் பேசி விடையிறுத்தமை காணோம். எறும்பின் பாடை சீவகனுக்கும், இராமாயணத்தில் குறிக்கப்பட்டபடி மனைவி யிடத்தில் அதைச் சொல்லி இறந்தவனுக்குமட்டுமே தெரிந்த தாய்த் தொல்காப்பியனார்க்குத் தெரியாதுள்ளது வியப்பே. பறவை விலங்கு முதலியன குறிப்பால் கருத்தை உணர்த்துவ தன்றிப் பேசும் பாடையென ஒன்றில்லை யென்று சிவஞான முனிவர் மறுத்துள்ளார். அது கிடக்க, வண்டிற்குச் செவியறிவு உண்டோ இல்லையோ அதனை ஆராயவேண்டியது நமது கடமை.

நச்சினார்க்கினியர் பொருள்களின் இயற்கையை மிக நுணுக்கமாக ஆராய்ந்தவரென்று கொண்டாடத் தக்கவராயினும் சிலவிடங்களிலே தவறியதும் உண்டு. தவறுதலை மறையாமல் எடுத்துக் காட்டி உண்மையை வெளிப்படுத்தாவிடில் புலமை என்ன பயனுடைத்து? கவிகளுக்கு மாபென்று சொல்லிக் கொண்டு இல்லாத பொருளைக் கற்பித்துக் கொள்ளுதலும், வரம்பு கடந்த புனைந்துரையும், வடநூற் புலவர்களால் ஆளப்பட்டன. ஆரியர் தென்னாடு புகுந்தவுடனே அந்தக் கற்பனையும் புனைந் துரையும் தமிழிலும் புகுந்து விட்டன. அது கடைச்சங்கப் புலவர் காலத்தே புகுந்துவிட்டது.

---

இதன்தொடர்ச்சி, இதன்கண்ணே, 284-ஆம் பக்கமுதற் காண்க.

# பரணர்.



திரு. வித்வான். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்,
ஆசிரியர், போர்டு உயர்தரக் கலாசாலை, காவிரிப்பாக்கம்.

சீரிய பேரிலக்கியங்களாக வமைந்துள்ள சங்க நூல்களை ஒருவன் கற்கத் தொடங்குவதன் முன்னமே அவற்றை யாக்கிய புலவர் பெருமக்களுள் கபிலர், நக்கீரர், இக் கட்டுரைத் தலைவராகிய பரணர் ஆகிய இம் மூவர்களை அறிந்து கொள்ளு கின்றான். இவருள் நக்கீரரைப்பற்றிய செய்திகளைப் பலர் பலபடக் கூறுவது மிகுதியாக இருத்தலின், அவரை யறிதல் அருமையன் றாதலின் கபிலர் பரண ராகிய இருவரையும் சிற்றிலக்கியங் கண்டு நன்னூல் சின்னூல்களாகிய இலக்கணங்களைக் கற்கும் பொழுது தான் அறிகின்றான். நன்னூலில் "பொதுப் பெய ருயர்திணைப் பெயர்கள்" என்று தொடங்கும் புணரியற் சூத்திர வுரையிலும், சின்னூலில் "உலவில் உயர்திணைமே லும்மைத்தொகை தான், பலர்சொன் னடைத்தாய்ப் பயிலும்" என்னும் சூத்திரவுரையிலும், முறையே, "கபிலபரணர்" எனவும் "கபிலபரணர் வந்தார் என உம்மைத்தொகை பலர்சொன் னடைத்தானவாறு" எனவும் வருதல் காண்க. இங்ஙனமே, இவை யிரண்டற்கும் முதனூலாய்த் திகழும் தொல்காப்பியத்துள் "உயிரீ றாகிய வுயர்திணைப்பெயரும்" என்று தொடங்கும் எழுத்ததிகாரச் சூத்திரத்தும், "உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே, பலர்சொன் னடைத்தென மொழிமனார் புலவர்" என்னும் சொல்லதிகாரச் சூத்திரத்தும் உரையாசிரியர் முதல் நச்சினார்க்கினியர் ஈறாக எல்லா ஆசிரியர்களும் உரை கூறு கின்றனர். இச் சிற்றிலக்கியங்க ளுள்ளும் திருவிளையாடற் புராணங்கள் இரண்டனுள் பெரும்பற்றபுலியூர் நம்பி திருவிளை யாடல்,

"முன்னமோர் காலம் சங்கமண் டபத்து
முறைமையி னிருப்பதற் கியைந்தே
பன்னிய பனுவற் காரண மாகி
விளங்குபே ராசனம் விரும்பிப்
பன்னியல் வாணர் கபிலர்நக் கீரர்
பாணர்முன் னாகவா லயத்துத்
தொன்னெறி யடியார்க் கினியன கொடுக்கும்
சொக்கனுக் குரைப்பமென் றடைந்தார்."

எனவும்,

"வாங்கருந் தெய்வப் பலகையைச் சங்க
மண்டபத் திடைநடு விட்டாங்
கோங்கமுன் கீர ரிருந்தனர் பின்னர்
உயர்புளோர் ஒருவருக் கிருப்ப
ஆங்கது வளர்தல் கண்டுநன் கபிலர்
இருந்தனர் அன்பொடு முன்போல்
தாங்குதல் கொடாது வளர்ந்திட விருந்தார்
பாணருந் தலமெலாம் மதிப்ப"

எனவும், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் இச் சங்கப் பலகை கொடுத்த செய்தியைக் கூறுமிடத்து "வேறுபுல் வகையாற் பூசை வினைமுடித் திறைஞ்சிக் கீரன்—ஏறினன் கபிலனோடு பாணனும் ஏறினனே" என்றும், சங்கத்தார் கலகம் தீர்த்த படலத்தின்கண்,

"இத்தன்மைய னாகிக்கலை வல்லோர்தமி ழெல்லாம்
சித்தங்கொடு தெருட்டுஞ்சிறு வணிகன்தெருள் கீரன்
முத்தண்டமிழ் கபிலன்தமிழ் பாணன்தமிழ் மூன்றும்
அத்தன்மைய னறியுந்தொறும் அறியுந்தொறு மெல்லாம்"

என்றும் கூறுகின்றன. இவற்றால், நாம் இக் கட்டுரைக்குத் தலைப்பொருளாகக் கொண்ட பாணர் தமிழ்கற்போ ரனைவரும் முன்னரே யறிந்துகொள்ளும் சங்கச்சான்றோர் என்பது பெறப் படுகின்றது. மேலும், பாணர் கூறப்படு மிடங்கடோறும் கபிலரோடு உடன் கூட்டியே கூறப்பெறுதலைக் காணுமிடத்து

இவருக்கும் கபிலருக்கும் நெருங்கிய நட்பு உளதாகல் வேண்டு மென்பது தெரிகின்றது. ஆனால், இதற்குச் சிறந்த சான்றுவது கபிலபரணர் என்னும் தொடரே யன்றி வேறொன்றும் கிடைத்திலது. இவரது தோழரான கபிலர் "உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை, வாய்மொழிக் கபிலன் என நக்கீரனாராலும்,

"வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலையி னெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன்" என்று

பெருங்குன்றூர்க்கிழாராலும், "வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்" என்றும், "பொய்யா நாவிற் கபிலன்" என்றும் முறையே பொருந்திலிளங்கீரனார், மாறோகத்துநப்பசலையார் முதலியோராலும் புகழப்பெற்றது போல, இவரும் "இன்றும் பரணன் பாடினன் மற்கொல்" எனஔவையாரால் புகழப் பெறுதலானும், குறுந்தொகை முதலிய தொகைநூல்களிற் கபிலரை யொப்பச் சொன்னலம் பொருணலம் சிறக்கக் கவிபாடும் சிறப்பினாலும் அவர் பெயரோடு இணைத்துக் கூறப்பெறும் தகுதி யுடையாராயினர் என்பது யாவரும் கொள்ளற்பால தொன்றாம்.

இங்ஙன், புலவர் பாடும் புகழ்படைத்த பரணரது பிறந்த ஊர், பெற்றோர் பெயர் முதலியன இதுகாறும் கிடைத்தில. எனினும் பதினோராம் திருமுறையி லுள்ள சிவபெருமான் திருவந்தாதியைப் பாடிய பரணதேவநாயனார் என்பவரும் இவரே யாயின், இவரது சமயம் சைவசமயமாகும். மற்றுத் திருவள்ளுவ மாலையின்கண் இவர் பாடியதாகக் காணப்பெறும்

"மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞால முழுதும் நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவரும் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து." என்னும்

வெண்பாவைக் கொண்டு இவர் திருமாலை வழிபடும் சமயத்தாராதல் வேண்டும் என்கின்றனர்! இங்ஙனம் உவமை

முகத்தாற் புகழ்ந்துரைத்ததனையே கருவியாகக்கொண்டு முடிபு செய்வதாயின், இவர்,

> "ஞால நாறு நலங்கெழு நல்லிசை
> நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
> ஆல முற்றங் கவின்பெறத் தைஇப்
> பொய்கை சூழ்ந்த பொழின்மண மகளிர்
> கைசெய் பாவை துறைக்க ணிறுக்கும்
> * * *
> புகார்நன் னாட்டதுவே." (அகம். 181)

என்னும் செய்யுளின்கண் புகார்நாட்டு மகளிரை விதந்துகூறு முகத்தால் பொய்கையோடு "முக்கட்செல்வ"னையும் உடன் கூட்டிப் புகழ்ந்த துணையானே இவரது சமயம் சைவசமயமே யென்பது துணியப்படுவதாம். இது எத்துணை வலியுடைத் தாயிற்று!

பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்து முற்றும் கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவனை இவர் பாடியிருப்பதோடு அமையாது,

> "படைநிலா விலங்குங் கடல்மருள் தானை
> மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
> பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து
> செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
> ஓங்குதிரைப் பௌவம் நீங்க வோட்டிய
> நீர்மா ணெஃகம் * * " என

அகத்திலும், "இருப்புமுகஞ் செறித்த எந்தெழில் மருப்பின்" என்று தொடங்கும் ஏர்க்கள வுருவகப் பாட்டினைப் புறத்திலும் பாடிப் பரிசில் பெற்றமையான், இவர் இக் குட்டுவன் காலத்தி லிருந்தவர் என்பது வெளிப்படையாதலாலும், இச்செங்குட்டுவன் ஐந்தாம் நூற்றாண்டி லிருந்தவனாதல் கூடும் என்று சேரன் செங்குட்டுவன் என்னும் சிறந்த ஆராய்ச்சி நூலொன்று கூறுவ தனாலும் இவர் காலமும் ஐந்தாம் நூற்றாண்டே யாகும். ஆயினும், இவர், "நன்னன், நறுமா கொன்று நாட்டிற்போக்கிய, ஒன்றுமொழிக் கோசர்" என்றும், "ஒன்றுமொழிக் கோசர்க்

கொன்று முரண் போகிய, கடுந்தேர்த் திதியன்" என்றும் கோசரது வரலாற்றினைக் கூறுகின்றார். இக் கோசர் துளுநாட்டு வாழ்நர் ஆவர். * இவர்கள் பாடலிபுரத்து அரசர் மரபின் ஒரு கிளையாகித் துளுநாட்டின் புறத்து வாழ்ந்த மோரியரோடு கூடித் தமிழ்நாட்டிற் புகுந்தனராதலாலும், அவர்கள் அக்காலத்து அரசுபுரிந்த முதலாங் கீர்த்திவர்மன் என்னும் சாளுக்கிய வேந்தனுக்குப் பகைவராய் வெளிவந்தமையாலும், அவ் வேந்தன் காலம் கி. பி. 566—597 எனத் தெரிதலாலும், இவர் காலமும் ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் எழாம் நூற்றாண்டின் முற்பகுதியு மாம் என்று கொள்ளும் வகையில் கிடக்கின்றது.

இனி இவரது புலமையியல் பல புலவர் பெருமக்களாலும் "அளக்க லாகா அழ முடைத்து" எனக் கருதப்பெறுகின்றது. புலமையாவது அறிவுடைமையாம் தன்மை யென்பது. அறிவு என்பது கல்வி கேள்விகளினாலாய அறிவோடு உண்மையறிவு கூடியது. இவ் வறிவு உலகிற் பிறந்த மக்கள் அனைவருக்கும் கருவிலே வாய்த்த திரு. அது இயற்கையில் ஆகாயம் போல் வண்ணம், அளவு, வடிவு, சுவை முதலியன வின்றித் தானே தனக்கு நிகராய் மிகத் தூயதாய் இருப்பது; மேலும், மக்களது மனத்தின்கண் நிலைபெற்று, அதன் தொழிலாய் விளங்குவது மாகும்.

இங்ஙனம், மனத்தின் தொழிலாய்த் தன் தொழிலை நடாத்து மிடத்துத் தனக்குக் கருவியாக, இது, பொறிபுலன்களைக் கொண்டு, உலகினை யாராய்கின்றது. அதனாற்றான், இவ் வுலகும் கட்புலனும்பொருள், செவிப்புலனும்பொருள் என முறையே ஐவகைப் பகுப்பின்கண் எஞ்சுதலின்றி அடங்குகின்றது. இவ் வறிவு கட்புலனைத் துணையாகக்கொண்டு பொருள்களை உற்றுக் கண்டதனைக் கண்டாங்கே மனத்திடத்து நிலைபெறச் செய்து பிறிதோ ரமையத்து முற்கண்ட பொருளோடு முற்றுமோ ஒருபுடையோ ஒப்புமையுடைய வேறோர் பொருளைக் கண்ட விடத்து அவ் விருபொருளையும் ஒப்புநோக்கி, அவற்றின் பெற்றி

* Vide Pages 520 to 522. History of the Tamils.

இது என்னும் முடிபினைச் செய்கின்றது. இங்ஙனம் பொருள் களைக் காண்டலும் ஏற்றுக் கோடலும், ஒப்புநோக்கலும் முடிபு செய்தலு மாகிய தொழில்களால் முடிந்தவற்றை மனத்தின் கண் நிறுத்தி, மேன்மேலும் பொருள்களை யாராய்தற்குக் கருவி யாகவும் செய்து கொள்ளுகின்றது. இச் செயலால் அறிவு உரம்பெற்ற காலத்தே புலமை எய்துகின்றது. இப் புலமை வலுப்பட்டுநின்ற காலத்துத்தான், பொருள்களை நெடுநேரம் உற்று அவற்றின் நிட்பநுட்பங்களை ஒருவன் அறிந்துகொள்ளுதல் இயலுகின்றது. இற்றாக, இவ்வண்ணம் அறிந்தபொருள்களை மீட்டும் பிறர் மனத்து நிலைபெறச் செய்யுங் காலத்து அவரது புலன்களைத் தன்வயம் கவர்ந்து அவை வாயிலாகத் தான் உணர்த்தப்புகும் பொருள்களை உணர்த்துவது தான் அதற்குச் சிறப்பாகின்றது. இச் சிறப்புத்தொழிலால் தான் அறிவு புலமையெனச் சிறப்பிக்கப் பெறுகின்றது. இவ்வுண்மை கருதித் தான், ஒருவன் பொருளுணர்ச்சியிடத்து எத்துணைத் திண்மை பெற்றிருப்பினும், அப் புலமை அவன் தன் உட்பொருளைப் பிறர்க்கு உரைக்குமிடத்தே பிறரால் அறியப்படுகின்றதென்றும், உரைத்திறத்தில் வழுவியவழி அப் புலமை பெருமை குன்றி மறைகின்றதென்றும், எனவே, ஒருவன் பொருளுணர்ச்சி பயிலுமிடத்தே அப்பொருளை உரைக்குந் திறத்தும் பயிலுதல் வேண்டும் என்றும் அறிவாளிகள் எல்லா மொழியின்கண்ணும் உரைத்துள்ளார்கள். ஆகவே, புலமையுடைமை யென்பது பொருள்களை அவற்றின் உண்மைநிலை வழாது அறிதலும், அறிந்ததனைப் பிறர்மனத்தும் நீங்காவகையில் எஞ்சாமல் நிலை பெறுத்தலுமே யாகும் என்பது தெளிவாயிற்று.

இப் புலமை யாவர்க்கும் ஓராங்கு உண்டாதல் அரிது. அதனாற்றான் உலகிற் புலவர் சிலரே காணப்பெறுகின்றனர். அதுபற்றியே தான் உள்நூல்களிலும் "எல்லாம் அறிவுடையவர், மற்றுப் புலமையுடைய வாராகார்" என்று பெரியோர்கள் கூறுகின்றார்கள். சிலர் புலவராவார் கல்விகேள்விகளிற் சிறந்தவ ரென்று கருதுகின்றனர். யார் யார் எவ்வெத் துறையில் பயின்று அத் துறையிற் காணப்பெறும் நிட்பநுட்பப்

பொருள்களை யுணர்தலிலும் பிறர்க்கு உணர்த்துதலிலும் சிறக்கின்றார்களோ அவர்களே அத்துறையிற் புலமையுடைய புலவராவர். இசைவல்லார் இசைப்புலவராதலும், ஓவியம்வல்லார் ஓவியப்புலவராதலும் இன்னோரன்னோராதலும் ஆகும். இங்கு, நாம் தலைவராகக் கொண்டவர் கல்விகேள்வியிற் புலமைமிக்காராவர்.

கல்விப்புலமை யுடையார் ஏனைப் புலவர்களைப் போல் ஒரே துறையிற் பயின்றவராதல் கூடாது. அவர் காட்சிக் குட்படுவன பெரியோர் தாம் தம் வாழ்விற் கண்ட நுண்பொருளைக் குறித்துள்ள நூல்களும், அவர் வாழ்விற்கு நிலைக்களனான உலகுமாம். இவ் வியைபுநோக்கி உலகினையும் "நுவலாநூல்" என வழங்குப. ஏனை நூல்களிலும் இந் "நுவலாநூல்" பரந்துபட்டதாய், அறிவார் அறிவையும் கடந்து நிற்பதாய்த் தோன்றி அவர்தம் அறிவின்கண் அறிவாயும் நுணுகி நிற்பதாய் விளங்குவது. ஓவியப் புலவ னொருவன் இந் நூலின் ஒரு காட்சியைப் பிறர்க்குணர்த்துவான் எழுதியவிடத்து அவ் வோவியம் அவன் காட்சிக்குட்பட்ட வளவே நிற்பினும், ஆண்டுக் கண்ட ஒலிஇயக்கம் முதலியவற்றைக் காட்டாது; ஆயினும், அங்குத் தோன்றிய வண்ணம் வடிவு முதலியன பெற்றுக் காண்பார்க்கு இன்பம்பயக்கும். எடுத்துக்காட்டாக, நீர்வீழ்ச்சி யொன்றன் படத்தினைக்காண்போமாயின், அதன் நீரின்வண்ணம், வரும் ஆறு, அருகுள்ள மரஞ்செடி கொடி முதலியன, பாறைக்கூட்டம், நீர்வீழ்தலால் எழும் பிசிர், துவலை ஆகிய இவையும் பிறவும் அதன்கண் காணப் பெறுவோமேயன்றி அந் நீரின் கடுவரவும், பெருங்கலிப்பும் அறிதல் கூடாது. ஆயினும், அதன்வண்ணமும் தோற்றமும் இன்பம் பயவாதொழிதல் இல்லை. இவ்வண்ணமே இசையுமாகும். இதனால், கல்வியொழிந்த ஏனைப் புலவாது செயல் பிறர் மனத்தை எளிதிற் பற்றி இன்பம் செயும் என்பது பெறப்படும். கல்விப்புலவாது செயல் ஏனைப் புலவாது செயலெல்லாம் தன்னகத்தேகொண்டு பிறர் மனத்தில் அச் செயல்களையும் செய்து தன் செயலால் இன்பத்தையும் விளைவிக்கும். இதனால்

இதன்கண் இருவகை யின்பம் எழுகின்றமை விளங்கும். ஒன்று காட்டுதும்.

> "ஊருண் கேணி உண்துறை தொக்க
> பாசி அற்றே பசலை காதலர்
> தொடுவுழித் தொடுவுழி நீங்கி
> விடுவுழி விடுவுழிப் பரத்த லானே."

இது பரணர் பாடிய புலமை சிறக்கும் பாடல்கல் பலவற்றுள் ஒன்று. இதன்கண் ஒருத்தி தன் தோழிக்குத் தன் பசலையின் இயல்பு இத்தன்மைத் தென்று கூறுகின்றாள். பசலை யென்பது "மகளிர் கணவனைப் பிரிந்தகாலத்து அவர்க்கு முன்புள்ள நெற்றியின் ஒளி கெட்டுக் கண்ணாடியில் வாயினா லூதியபொழுது ஆவி படர்ந்து ஒளி மழுங்குவது போல வேறுபட்டுக் காட்டுந் தன்மை." இதனைப் பாடிய புலவர் பெருமகனாரது புலமை வயங்கு செய்யுள் நம் மனத்து இசைப்புலவர், ஓவியப்புலவர் ஆகிய இருபுலவரது செயலைச்செய்து தன் சீரிய செயலையும் செய்து இன்பம் செய்தல் எளிதிற் காணப்பெறுகின்றது. இப் பாட்டின் முதலடியில் உள்ள ஊருண்கேணி யென்பது ஊரார் உண்ணுநீர்க் கொள்ளும் குளம் என்பது. உண்துறை யாவது இறங்கி நீர் எடுக்கும் துறை. இந்த ஊருண்கேணி யுண்துறை யென்ற தொடர், ஓர் அழகிய தெருக்களமைந்த ஊரின்காட்சியும் அதனடுவில் சிறந்த படிக்கட்டுகள் நாற்புறத்தும் சூழ விளங்கும் குளக்காட்சியும் அக்குளத்தின் நீர்மேற் பாசி படர்ந்து பசுங்கம்பளம் விரித்தாற்போல் தோன்றும் காட்சியும் நீர்த்துறையில் மகளிர் இறங்கி ஒளிவீசும் கலங்களோடு நீர் கொண்டு அசைந்தது நடக்கும் இடை துவள ஏறுதலும் இறங்குதலும் செய்யும் காட்சியும், கலங்களில் நீர் முகக்குங்கால் அப் பாசி வட்டமாக விலகியும் கூடியும் வரும்காட்சியும் வன்மை மிக்க ஓவியம் வல்ல புலவ னொருவன் எழுதிய படம் போல் மனத்தில் காட்டி அவ் வுருவகிளர் ஓவிய வின்பத்தினைச் செய்கின்றது. ஊருண்கேணி என்று தொடங்கிக் காதலர் என்பது வரையில் சமநிலத்தி லோடும் நீரோட்டம் போல் மெத்தெனச் செல்லும் ஓசைநலம் பின்னிரண்டடிகளிலும்

சலசல வெனச் செல்லும் நீரோட்டம் போலத் ஓடிச் சுதியொடு கூடிப் பாத்தலானே என மெத்தென முடிதல் தமிழ் கமழும் விழுமிய இழுமென்னோசை இசையின்பத்தைப் பயந்து நிற்கின்றது. இங்ஙனம் இருவகைப் புலமைச்செயல் செய்து கல்விப்புலமை யான தனக்கெனச் சிறந்த செயலைச் செய்தல் தலைவி தன்னொத்த மகளிர்க்கு இயல்பாகவுள்ள நீர்கொள்ளும் செயலுக்குப் பயிற்சி மிக்க கேணியை உவமித்திருத்தலாலும், முட்டைப்பாசிகளால் எளிதில் அடையப் பெறுவன ஊருண்கேணிகளே யாதலால் அதனை யெடுத்தாளல் புலமையி னியல்பாதலாலும், நன்கு கட்புலனாகாத பசலையினை விளக்கிக் கூறுதற்குப் பலரும் எளிது காண்பதோர் பொருளையே உவமித்தல் வேண்டுமாதலாலும், தொடுவுழி நீங்கி விடுவுழிப் படர்வதற்குச் சமயவாதிகள் கூறும் செம்பிற்களிம்பு நுணுகி நோக்குவார்க் கன்றி ஏனையோர்க்கும் பாசி போல விளங்கக் காணப்பெறுமையாலும் அதனை விலக்கிப் பாசியினையே கூறியிருத்தலாலும் விளங்குகின்றது. அன்றியும் பாசி தொக்கவிடத்து நீர் பொலிவு குன்றுதல் போலப் பசலை நீங்காது மிக்கவிடத்து என் பொலிவு "கன்று முண்ணாது கலத்தினும் படாது நல்லான் தீம்பால் நிலத்துக்காங்கு" எனக்கும் ஆகாது என்னைக்கும் ஆகாது" குன்றி யழியுமே எனத் தலைவனது பிரிவாற்றாது தலைவி அழுங்குதலும், "தொடுவுழித் தொடுவுழி" என்றதனால், தலைவன் இரவினும் பகலினும் களவொழுக்கம் பூண்டு வருகின்றா னென்பதும், இப் பிரிவு அவன் வரைவிடை வைத்த பிரிவு என்பதும் இவைபோல்வன பிறவும் ஆயுந்தொறும் சிறப்பின்பத்தைத் தருதல் பெறப்படும். இவ்வாறு கல்விப்புலமை சிறந்திருத்தல்பற்றியே பெரியோர் "புலவர்" என்னும்சொல் கல்விப்புலமையுடையாரையே குறிக்கும் வகையில் வழங்கி வருகின்றார்கள். இதன் இயல்பினை இன்னும் விரிப்பிற் பெருகும். நிற்க.

புலமை மிக்காது நல்லிசைப் புலமையை யாராயுமிடத்து அதன்கண் பல சிறப்பியல்புகள் வெளிப்படுகின்றன. அவை, பண்டைக்கால நிகழ்ச்சிகூறல், உவமைநலம், உலகவழக்கு,

பழமொழியாளல், உய்த்துணரவைப்பு முதலியனவாம். இவற்றை முறையே இவரது பாடல்களிற் காண்போம்.

## 1. பண்டைநிகழ்ச்சிகூறல்.

பண்டைநிகழ்ச்சிகளுட் சிறப்பாக இவர் பாடலில் அரசர், குறுநிலமன்னர் முதலியோர் பலர் போர்செய்ததும், கற்புடை மகளிர் செய்த செய்கைகள் சிலவும் காணப்பெறுகின்றன.

அரசர்களுள் இவராற் பாடப்பெறும் தகுதியுடையாராயினர் சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், கரிகால் வளவன் முதலியோராவர். இவருள் வேல்கெழுகுட்டுவனை இவர் பதிற்றுப்பத்து ஐந்தாம்பத்திற் புகழ்ந்து கூறியிருக்கிறார். இக் குட்டுவன் "குடவர் கோமான் நெடுஞ் சேர லாதற்குச் சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்" என்று மேற்கூறிய ஐந்தாம் பத்தின் பதிகம் கூறுகின்றது. முத்தமிழிலக்கியமும், இச் செங்குட்டுவனது இளவல் இங்கோவடிகளா லியற்றப் பெற்றது மாகிய சிலப்பதிகாரத்து மூன்றுங் காண்டத்து இவன் கூறப்பெறுகின்றான். ஆயினும் அங்கு இவன், "குமரியொடு வடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற் றேழ்பரி நெடுந் தேர்ச் சோழன் தன்மகள் நற்சோணை யீன்ற மக்கள்" என அடியார்க்குநல்லாரது உரையின்கட் கூறப்பெறுகின்றான். அன்றியும் மேல் பதிற்றுப்பத்தின் நான்காம்பத்தின் தலைவனை களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலாதனுக்குத் தந்தை "ஆராத் திருவிற் சேரலாதன்" என்றே கூறுதலால், அந் நார்முடிச் சேரலுக்கும் இச் செங்குட்டுவனுக்கும் தந்தை சேரலாதனே யென்பதும், அவனது தாய் "வேளாவிக்கோமான் பதுமன் தேவி" என்று அப்பதிகம் கூறுதலாலும் இவன் "சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்" என்று இப்பதிகம் கூறுதலாலும் இவ் விருவர்க்குந் தாய்மார் வேறு என்பதும் தெரிகின்றன. தெரியினும், இச் செங்குட்டுவனது பிறப்பினைக் "குடவர் கோமான் நெடுஞ்சேரலாதற்குச் சோழன் மணற்கிள்ளி யீன்ற மகன்" என்று கூறுவது போலன்றிச் சிலப்பதிகாரம் "சோழன்

மகள் நற்சோணை யீன்ற மக்கள் இருவர் என்று கூறுவதால் இவனது தாய் நற்சோணை யென்பாள் என்று விளங்குகின்றது. இது "சேரன் செங்குட்டுவன்" என்னும் நூலுடையார்க்கும் உடன்பாடு.

நிற்க. திரு. P. T. சீநிவாசஐயங்கார் அவர்கள் சிலப்பதிகாரத்திற் கூறப்பெறும் செய்தியை அறவே யொதுக்கிவிட்டு நம் கட்டுரைத் தலைவராய பரணரது பதிற்றுப்பத்துப் பாடலின் பதிகம் ஒன்றனையே சான்றாகக் கொண்டு உண்மை காண வியலாமைபற்றி ஒரு சங்கை விடுக்கின்றனர்*. இவர் சிலப்பதிகாரத்திற் செங்குட்டுவனைப் புகழ்ந்து கூறும் பகுதியாகிய வஞ்சிக்காண்டம் ஏனைய இரண்டு காண்டங்களையும் பாடிய ஆசிரியரால் இயற்றப்படாது அவருக்குப் பிற்போந்த ஓர் அறிஞரால் இயற்றிச் சேர்க்கப்பட் டிருத்தல் வேண்டுமெனச் சில சிறந்த காரணங்களால் எண்ணுகின்றார். இதனாலே, இதன்கட் கூறப்பெறும் நற்சோணையை விடுத்து (1) "குடவர் கோமான் நெடுஞ்சேரலாதற்குச் சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்" என்றிருப்பது தவறுடைத்து. ஓர் ஆண்மகன் பிறனொருவனுக்கு மனைவியாதல் கூடாது. இப் பதிற்றுப்பத்தின் பதிப்புக்குக் காரணமாயிருந்த மூலவோலைச் சுவடிகளை ஆராய்தலும் இனி முடியாத செயலாகும். இராமபாணம் முதலிய பூச்சிகளால் அரிக்கப்பெற்றுச் சிதர்ந்துகிடக்கும் ஓலைச் சுவடிகளைக் கண்டவர்கள் இத்தவறு எவ்வண்ணம் உண்டாயிருத்தல் கூடும் என்று ஆராயவும் துணியார். திரு. M சீநிவாச ஐயங்கார் அவர்கள் ஒருவாறு முன்வந்து இவ் வைந்தாம் பதிகத்துக் கூறப்பெறும் சோழன் மணக்கிள்ளி என்பான் குடவர் கோமானாகிய நெடுஞ்சேரலாதன் உடன்பிறந்தாள் ஒருத்தியின் கணவனாதல் வேண்டும் என்று கூறி இக் காலத்து மலையாளத்து வழங்கும் "மருமக்கள்தாயம்" என்னும் உரிமை அக்காலத்தும் நிலவிற்றெனக் கொண்டு, செங்குட்டுவன் தன் அம்மான் அரசுரிமையைத் தான் அடைந்தவனாதல் வேண்டும் என்று கூறுகின்றார். சேரர்களோ தமிழர்கள். மருமக்கள்

* History of the Tamils p. 602-606 a pa 512.

தாயத்தைக் கையாளும் மலையாளிகளோ பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்வந்தவர்களாவர். அன்றியும், குட்டுவனது தந்தையான நெடுஞ்சேரலாதனும் தன் தந்தையின் அரசுரிமையை எய்தினவனேயன்றித்தாய் அம்மான் அரசுரிமையைப் பெற்றவனல்லன்.'' என்று கூறுகின்றார்.

இனி இச் செங்குட்டுவன் பல அரசர்களை வென்று அடிப்படுத்தியும் பல புலவர்பெருமக்களை ஆதரித்தும் பொன்றாப் புகழ்படைத்தும் புலவர்பாடும் பெருமை யுடைய னாயினான்.

இங்ஙனமாதற்கு இன்றியமையாத கல்வியறிவுடைமையும் குன்றா வீரமுடைமையும் இவனை விதந்துகூறும் சொற்றொடர்களால் இவனிடத்தில் அமைந்து கிடந்தன வென்பது தோன்றுகின்றது. "தொலையாக் கற்பநின் நிலைகண் டிகுமே" என்ற பதிற்றுப்பத்தின் தொடரும், "புரையோர் தம்மொடு பொருந்த வுணர்ந்த அரசரேறே," "புலவரை யிறந்தோய்" என்ற சிலப்பதிகாரத் தொடர்களும் இவனது கல்விமாண்புக்குச் சான்று பகருகின்றன. குன்றாவீரமுடைய னென்றற்குப் பரணர் பாடிய பதிற்றுப்பத்தினும் வேறு சான்று வேண்டா. சுருங்கக் கூறின் அப்பத்தின் இறுதிக்கண் வரும் பதிகமே சாலும். அது,

"வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்,
கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்
கானவில் கானங் கணையிற் போகி
ஆரிய வண்ணலை வீட்டிப் பேரிசை
இன்ப லருவிக் கங்கை மண்ணி
இனந்தெரி பல்லான் கன்றொடு கொண்டு
மாறா வல்வில் இடும்பிற் புறத்திறுத்(து)
உறுபுலி யன்ன வயவர் வீழச்
சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி
அக்கரை நண்ணிக் கொடுகூர் எறிந்து
பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்

முரணை முழுமுதல் துமியப் பண்ணி
வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தல் முரற்சியால்
குஞ்சர வொழுகை பூட்டி வெந்திறல்
ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோர்
ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து
நிலைச்செருவின் ஆற்றலை யறுத்துக்
கெடலருங் காணையொடு

கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனைக் காணமமைந்த. காசறுசெய்யுட் பாணர் பாடினர் பத்துப்பாட்டு. அவைதாம்:— சுடர்வீவேங்கை...............வெருவருபுனற்றூர். இவை பாட்டின் பதிகம்'' என்பது.

இனி, இச் செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான் என்று இப்பதிகத்தின் இறுதி உரைக்குறிப்பால் தெரிகின்றது. சிலப்பதிகாரம்,

"வையங் காவல் பூண்டநின் நல்யாண்டு
ஐயைந் திரட்டி சென்றதற் பின்னும்
அறக்கள வேள்வி செய்யாது யாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோ யாயினை" என்பதனால்,

இப்பதிகத்தின் முதற்கட் கூறப்பெறும் "கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக் கானவில் கானம் கணையிற்" போகிய காலம் இவனது ஐம்பதாம் யாண்டே என்பது அறிதலாம். மேலும், மாடலன், இவனுக்குப் பலவேறு நிலையாமைகளை யுணர்த்துபவன் "திருஞெமி ரகலத்துச் செங்கோல் வேந்தே, நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை" என்று கூறுதலால், இப்பதிகத்துக் கூறப்பெறும் போர்ச்செயல்கள் யாவும் கற்கோள் வேண்டிப் போன செய்திக்கு முன்னமே நடந்தன வென்பது விளங்குகின்றது. இச்செயல் சிலப்பதிகாரத்துப் பரக்க கூறப் பெறுதலால் அதனை நாம் இங்குக் கூறுகின்றிலம்.

நிற்க, "ஆரிய வண்ணலை வீட்டிப் பேரிசை இன்பல் அருவிக் கங்கை மண்ணி"ய செய்தி சிலப்பதிகாரத்தும்

"உடன்று மேல்வந்த ஆரிய மன்னரைக்
கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்!" எனக்

கூறப்பெறுகின்றது*. பின்னர், இவன் "மாறு வல்வில் இடும்பிற் புறத்திறுத்"த செய்தி நெடுந்தேர்த் தானையொடு இடும்பிற்புறத் திறுத்திக் கொடும்போர் கடந்து" என்று இளங் கோவடிகளால் கூறப்படுகிறது. இப்பதிகத்தின் உரைக்குறிப்பில் "இடும்பில் என்றது இடும்பாதவனத்தை. புறம் அவ்விடம்" என்பது காணப்படுவதால், இவ் விடும்பாதவனம் சம்பந்த சுவாமி களால் "இனமாதவர் இறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே" என்றும் "மடுக்கண்மலர் வயல்சேர் செந்நெல் மலிநீர்மலர்க் கரைமேல், இடுக்கண்பல களைவானிடம் இடும்பாவன மிதுவே" என்றும் மூதற்றிருமுறையிற் பாடிப் பரவியுள்ள இடும்பாவன மாகும் என்று கருதலாம். சிலர், இப்பதிகமும் சிலப்பதிகாரமும் இடும்பிற்புறம் என்றே கூறுவதால், இஃது இடும்பாதவன மென்றோ இடும்பாவன மென்றோ கூறல் அமையாது என்று அவ்வுரைக்குறிப்பையும் ஒதுக்கிக் கூறுகின்றனர். சிலப் பதிகாரத்தும் இவ் "இடும்பிற்புறத்"தைப்பற்றி ஒரு குறிப்பும் குறிக்கப் பெறவில்லை. எனினும், இதனையடுத்தே, "உறுபுலி யன்ன வயவர் வீழச், சிறுகுரல் நெய்தல் வியலூர் எறி" என்று இப்பதிகத்தும், "கறிவளர் சிலம்பிற் றுஞ்சும் யானையின், சிறுகுரல் நெய்தல் வியலூர் எறிந்தபின்" என்று சிலப் பதிகாரத்தும் வருதலை நோக்கின், இவ்வியலூர் கடற் சார்ந்த வூர் என்பது விளங்குகின்றது. இவ்வூரும் சம்பந்தசுவாமிகளால் "விரிநீர் வியலூர்" எனப் புகழப்பெறுகின்றது. இவ்விய லூரேபோல் இடும்பிலும் இடும்பாவனமென்றே துணியப்பெறின் இவையிரண்டும் கீழ்க்கடற்கரைப் போரெனவும், "அக்கரை நண்ணிக்கொடுகூர் எறிந்து" என்று பதிகங் கூறுவது மேலைக் கடற்கரைப் போரெனவும் கோடல் கூடும்‡. கொடுகூர்

---

* கங்கை மண்ணியென்று பதிகங் கூறுவது செங்குட்டுவன் தன் தாயைக் கங்கையில் நீராட்டினன் என்று சிலப்பதிகாரத்துக் கூறப்படும் செய்தி என்று சொல்லுவாருமுளர். P. 805, H. A. Dravidians.

‡ An. Rep. p. 45. L. T. S. 1905.

கொடுகூர் என்னும் பெயரிய நாடொன்று சேரனாட்டின் பகுதியாக விருந்ததென இரவிதத்தனென்னும் சிற்றரசன் ஒருவனது பழைய சாசனம் ஒன்று தெரிவிக்கின்றது. இக்கொடுகூர் "வெண்ணிநாட்டுவெண்ணி," "மிழலை நாட்டுமிழலை" யென்றது போலக் கொடுகூர் நாட்டுக்கொடுகூர்என்றுகொள்ளலாம். ஆகவே, சேரனாடு மேலைக் கடற்சார்ந்த நாடாதலாலும், அதன்பகுதியே இதுவுமாதலாலும் கொடுகூர்ப்போர் மேலைக்கடற்கரைப் போரென்றல் வலிபெறுவதாகும். வேறு சில அறிஞர்கள் இக் கொடுகூர் நாடு இப்போதைய மைசூர் அரசாங்கத்தின் தென் பகுதி யாதலால் இதனை மேலைக்கடற்கரைப் போரென லாகாது; கொடுக்கூர் என்னும் ஊரொன்று திருச்சிராப்பள்ளி சில்லாவிலுள தென்றும் அதுவே கொடுகூர் என அக்காலத்து வழங்கப் பெற்றிருத்தல் வேண்டுமென்றும் கருதுகின்றனர்.

இனி, இப்பதிகத்துப் போர்ச்செய்திகளாக இதுகாறும் கூறிப் போந்தவை, இதனகத்தும் சிலப்பதிகாரத்துமே காணப் படுகின்றனவே யன்றி, இச் செங்குட்டுவனை விரிவாகப் புகழ்ந் துள்ள பரணரால் அவர் செய்யுட்களுள் யாண்டும் கூறப்பட்டில. இப்பதிகமோ அவராற் பாடப்பெற்ற தன்று; அவருக்குப் பிற்போந்த சான்றோ ரொருவரால் ஆக்கப்பெற்ற தாகும். இப்பதிகத்தில் "வெந்திறல் ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோர் ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத்து இறுத்த" செய்தியும் சிலப்பதிகாரத்து,

"மாடல மறையோன் மன்னவற் குரைக்குநின்
மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்
இளவரசு பொறாஅர் ஏவல் கேளார்
வளநா டழிக்கு மாண்பின ராதலின்
ஒன்பது குடையும் ஒருபக லொழித்தவன்
பொன்புனை திகிரி ஒருவழிப் படுத்தோய்" எனவும்

"வியலூ ரெறிந்தபின்
ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை
நேரிவாயில் நிலைச்செரு வென்று" எனவும்

கூறப்படுகிறதே யன்றிப் பாணர் பாடலுள் இல்லை. இவை யொழிந்த பழையன் போர், கடல்பிறக் கோட்டிய செய்தி ஆகிய இவ்விரண்டுமே இக்கட்டுரைத் தலைவர் பாடல்களிற் பயின்று வருகின்றன. இவற்றுட் கடல்பிறக்கோட்டிய செய்தி, "படுந் திரைப் பனிக்கடல் உழந்த தாள்" என்றும்,

"இனியா ருளரோ நின்முன்னு மில்லை
மழைகொளக் குறையாது புனல்மிக நிறையாது
விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி யிமைப்பின் வேலிடுபு
முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே"

என்றும்,

"கோடுநரல் பௌவம் கலங்க வேலிட்டு
உடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய
வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்
செல்குவ மென்னார் பாடுபு பெயர்ந்தே."

என்றும்,

"நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ!"

என்றும் வரும் பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்துப் பாட்டுகளிலும்,

"மின்னுவசிப்
புரவுக்கால் கடுப்ப மறலி மைந்துற்று
விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
படைநிலா விளங்கு கடன்மருள் தானை
மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவம் நீங்க வோட்டிய

நீர்மா ணெஃகம் நிறத்துச்சென் றழுந்தக்
கூர்மத னழியரோ நெஞ்சே" எனவரும்

இவரது அகப்பாட்டிலும் கிடந்து மிளிர்கின்றது.

a இச்செய்தியினிடத்து ஆராய்ச்சியாளர்கள் பெருங் கலக்கங் கொண்டு, "இவ்வண்ணமும் ஒன்று நிகழ்ந்திருத்தல் கூடுமோ" என் றையுற்றுப் "பெருங்கடற் பரப்பும் தன் அரசிற் குட்பட்டதே யென்றற் கறிகுறியாகச் செங்குட்டுவன் தன் வேலினைக் கடலின்கண் எறிந்திருத்தல் வேண்டும். அச் செய்தி இங்ஙனம் திரிந்து வந்ததாகும்" என்று கருதுகின்றனர். மேலும், "முந்நீர் விழவின் நெடியோன், நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" என்ற புறநானூற்று ஒன்பதாம் பாட்டு அடிகளைக்கொண்டு, "முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்றா னென்ற வியப்பால் நெடியோ னென்றா ரென்ப" எனவரும் உரைக் குறிப்பையும் துணையாக்கி, முந்நீர்விழவு ஒன்று இத்துணைப் பெருஞ்செயலாகக் கூறப்பெற்றுளது என்று அவர்கள் முடிபு செய்கின்றனர். அன்றியும், "சேர்மன்னர்களுள் நெடுஞ்சேரலாதன் காலத்தே ஆரியர் நாகரிகம் அந்நாட்டிற் பாவியிருந்தமையின், அவர்களது வீரருட் பரசுராமனென்பான் தன் வேலெறிந்து கடல்பிறக்கிடச் செய்ததாக அவ்வாரிய ஆசிரியர்களாற் கற்பிக்கப்பெற்றது கொண்டே இது செய்தானுதலுங் கூடும். இச்செய்தி பின்னர்த் திருவிளையாடற் புராணத்து உக்கிர பாண்டியன்மே லேற்றப்பெற்ற தாதல் வேண்டும்" என்றும் கருதுகின்றனர்.

இனிப் பழையன் மோகூர்ப்போர்தான் பரணரால் பெரிதும் சதுரப்பாடமைய விளக்கப்பெறுகின்றது. செங்குட்டுவன்

---

a "It is difficult to guess what this oft repeated enlogy means. Kuttuvan's spear did apparently succeed in doing what Canute's loudly-uttered order could not. Probably the throwing of the spear was solemnly performed by him as a symbol of Kuttuvan's lordship of the sea." History of the Tamils p. 514-5.

செய்துள்ள போர்களில் இப் பழையனெடு செய்த போர்தான் மிக வீரஞ்சிறந்த போர் என்றல் பொருத்தமாகும். இச்செயல், பதிற்றுப்பத்தின் ஐந்தாம்பத்துப் பதிகத்துள்,

"பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்
முரரை முழுமுதல் துமியப் பண்ணி
வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தல் முரற்சியால்
குஞ்சர வொழுகை பூட்டி" யென்று கூறப்படுகின்றது.

இதனைப் படிக்கும் நம் நெஞ்சமே இத்துணைத் துடிப்புக் கொள்ளு மாயின், அப்போர்ச்செயல் எத்துணைக் கடுமையாக விருந்திருத்தல் கூடும் என்பதைப் படிக்குந் திருவாளர்களே அறிந்துகொள்ளல் வேண்டும்!

பழையன் என்பவன் பாண்டியமன்னர்களின் கீழிருந்த ஒரு குறுநில மன்னன் என்று சிலர் கூறுகின்றனர். இவர் கட்குச் சான்றாவது இவன் தனக்குக் காவன்மரமாக வளர்த் தோம்பியது ஒரு வேப்பமரம் என்பது. பதிற்றுப்பத்தின் உரை காரர் இவனைப் பற்றி இதுபற்றியொன்றும் குறித்திலர். பழையன் என்பான் ஒருவனது வரலாறு அகத்திலும் நற்றிணையிலும் கூறப்பெறுகின்றது. அவனது நகரங்களுள் போஒர் என்பது மிகப்பலவாய்ப் புகழப்படுகின்றது. பழையன்மாறன் என்னும் வேறொருவன் அகநானூற்று 346-ஆம் பாட்டினுள் கூடற் பறந்தலையுள் கிள்ளிவளவனால் தோல்வியுற்றானென்பது தெரிகிறது. பதிற்றுப்பத்து 9-ஆம் பத்தின் பதிகத்தின்கண் "வித்தை யாண்ட இளம்பழையன் மாறன்" என்று ஒரு பழையன் கூறப்பெறுகின்றான். மற்று, இவ் விளம்பழையன்மாறன் இளஞ் சேரலிரும்பொறையின் காலத்தவனாதலாலும், இப்பொறை, "கடவிருப்ப வேலிட்டும், உடலுநர் மிடல்சாய்த்தும், மலையவும் நிலத்தவும் அருப்பம் வெளவிப், பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய, கொற்றத் திருவின் உரவோ ரும்பல்" எனப் பெருங் குன்றூர்கிழாரால் புகழப்படுதலினாலும் கடலோட்டிய செங்குட்டு வன் காலத்துப் பழையன் இவனாகான் என்பது தெளியலாகும். மேலும், செங்குட்டுவன் தன் மைத்துனனை கிள்ளிவளவன்

சோழநாட்டிற்கு இளவரசனுதலைப் பொருது அவன் ஏவலையும் கேளாது பகைத்தெழுந்த ஒன்பது மன்னர்களை நேரிவாயில் என்னுமிடத்து வெற்றிகொண்டு வளவ னரசுரிமையும் நிலைபெறச் செய்தானென்று சிலப்பதிகாரம் கூறுகின்றமையின், இக்கிள்ளி வளவனெடு பொருத பழையன்மாறன் என்பான் செங்குட்டுவன் காலத்தவனே யாதல் பெறப்படும். அன்றியும், தனக்குப் பகையான வளவனுக்குத் துணைசெய்தமைபற்றிச் செங்குட்டுவன் மீதும் இவன் பகைகொண் டிருத்தல் கூடுமாதலின், இவனே பதிற்றுப்பத்தில் பரணரால் கூறப்படும் பழையன் எனத் தெளிதல் வேண்டும். இவனைப் "பழையன் மோகூர்" என்று கூறுவது முண்டு. மோகூர் என்பது இவனது தலைநகரம். இங்ஙனம் "பழையன் மோகூர்" எனக் கூறிய பரணர் அகத்தில் "பழையன்" என்றே கூறி அவனது போஒர் என்னும் ஊரினையும் சிறப்பிக்கின்றார். இக்கூறியவாற்றால், செங்குட்டுவனேடு பொருது தோல்வியுற்றபோழ்து பழையன் தன் மோகூரினை யிழந்து "போஒர்" என்னும் ஊரினைச் சீர்செய்து புலவர் பாடும் புகழ்பெறுவா னாயினன் என்று கொள்ளல் வேண்டும்.

இனி, இப் பழையன் காவிரிபாயும் சிறந்த நாடுடையன். இவனது நாடு மழைவளம் பொய்த்தலின்றி விளைவுநலம் பிழையாப் பெருமையினை உடையது; இவன் சிறந்த பிழைத்தலறியாத வேல் ஏந்திய வீரமுடையவன்; பகை தலைவந்தோர்க்குப் பணியா வாய்மையன். இவை,

"மழையொழுக் கறாஅப் பிழையா விளையுள்
பழையன் மோகூர்"

என்று மதுரைக் காஞ்சியும்,

"வெண்கோட் டியானைப் பேஎர் கிழவோன்,
பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி"

என்று நற்றிணைப் பத்தாம்பாட்டும் "வென்வேல், மாரியம்பின் மழைத்தோற் பழையன்" என்று பரணரது பாட்டும் கூறியதனால் அறியப்படுகின்றன. இப்பழையனது அவைக்களத்தில் கோசர்

என்னும் ஒருவகை மரபினர் இருந்து தம் வஞ்சின மொழியாலே மேம்பாடுற்று விளங்கினர். அது "பழையன் மோகூர் அவையகம் விளங்க—நான்மொழிக் கோசர் தோன்றியன்ன" என மாங்குடி மருதனாராலும், துனைகா லன்ன புனைதேர்க் கோசர்........மோகூர்" என மாமூலனாராலும் கூறப்படுதல் காண்க. பழையன் இவர்களது வரிசை யறிந்து ஆதரித்து வந்தான். நிற்க.

இக் கோசர் துளுநாட்டுமக்கள். இவர்கள்,

"மெய்ம்மலி பெரும்பூண் செம்மற் கோசர்
கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாக லார்கைப் பறைக்கட் பீலித்
தோகைக் காவின் துளு நாடு" (அகம் 15)

எனவும்,

"அருந்திறற் கடவுட் செல்லூர்க் குணஅது
பெருங்கடன் முழக்கிற் றாகி யாணர்
இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கருங்கட் கோசர் நியமம்" (அகம். 90)

எனவும்,

"மாவீசு வண்மகிழ் அஃதைப் போற்றிக்
காப்புக்கை நிறுத்த பல்வேற் கோசர்
இளங்கள் கமழும் நெய்தலஞ் செறுவின்
வளங்கெழு நன்னாடு" (அகம். 113)

எனவும், " தந்தை
கண்கவி னழித்ததன் றப்பற் றெறுவா
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய
கடுந்தேர்த் திதியன்" (அகம். 196)

எனவும்,

"வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர்." (அகம். 205)

எனவும்,

"கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்
கழனி யுழவர் குற்ற குவளையும்
கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
பல்லிளங் கோசர் கண்ணி யயரும்
மல்லல் யாணர்ச் செல்லி (அகம். 216)

எனவும்,

"வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்
கலத்து முண்ணான் வாலிதுமுடாஅன்
(அன்னிமிஞிலி)" (அகம். 262)

எனவும், " வென்வேல்
இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்
இகலினர் எறிந்த அகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம்." (புறம். 169)

எனவும்,

"வலம்புரி கோசர் அவைக்களத் தானும்" (புறம். 283)

எனவும்,

"நனைக்கள்ளின் மனைக் கோசர்
தீந்தேறல் நறவுமகிழ்ந்து
தீங்குரவைக் கொளைத்தாங்குந்து" (புறம். 396)

எனவும்,

"பறைபடப் பணில மார்ப்ப இறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நல்லூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்று." (குறுந் 15)

எனவும்,

" நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமோற் சிறிதே" (குறுந் 73)

எனவும் வரும் நல்லிசைச் சான்றோர்களின் அணிதிகழும் சொற்பொருளை நோக்குமிடத்து, இக் கோசராவார் துளுநாட்டு மக்கள் என்பதும், இவர்கள் வாய்மை தவறாத மாண்புடையவர் என்பதும் இவர்கள் செல்லூர், நல்லூர் முதலிய ஊர்களிலிருந்து சிறப்பெய்தினவ ரென்பதும், இவர்கள் படைப்பயிற்சி மிக்குப் பல வேந்தரோடு பொருது அப்போர் செய்தற் கேற்ற சூழ்ச்சித் திறத்தால் வென்றி கொண்டு விளங்கின ரென்பதும், இவர்கள் தொன்முதாலத்துப் பொதியிலில் இருந்து தம் மொழியின் வாய்மையும் படைப்பயிற்சியும் மேம்படச் செய்வ ரென்பதும் பெறப்படுவதோடு செல்வக்காலை அல்லற்காலை ஆகிய இருகாலும் ஒரு பெற்றியராய் நட்பாடும் இயல்பினர் என்பதும் தெரிகின்றன. மேலும் யானை முதலியவற்றை வரையாது வழங்கும் வள்ளன்மை மிக்க அகுதை யென்பானொடு நட்புப்பூண்டு அவனுக்கு உற்றவிடத்து உதவி செய்தனர்; அன்னிமிஞிலி யென்பானது தந்தையின் கண்ணை இவர்கள் களைந்தாராகத் திதியன் குறும்பியன் முதலியோரால் கொல்லப்பட்டனர். இவர்கள் செல்லூரின்கண் மகளிர் கொய்த ஞாழல், உழவர் கொய்த குவளை, புறவிற்பூத்த முல்லை முதலிய மலர்களாற் கண்ணிவேய்ந்து சூடிக் களித்தலும் இளங்கள் ளுண்டு குரவையாடுதலும் பிறவும் செய்து மகிழும் இயல்பினர்.

படைப்பயிற்சி மிகுதியால் இரும் பிடம்படுத்த வடுவுடை முகத்தராய் இக்கோசர் விளங்குதலைக் கண்ட பழையன் இவர்களைத் தன் அவைக்களத்தே கொண்டு போர்த்தொழில் மேற்கொண்டு வேற்று மன்னரை மதியாது செம்மாந்து வருவானாயினன். அக்காலத்து மோரியர் என்னும் ஒருவகை வீரர்கள் வடநாட்டிலிருந்து படையெடுத்து வரலாயினர். இவர்களை "விண்பொரு நெடுவரை இயல்தேர் மோரியர்," "மாகெழுதானை வம்ப மோரியர்," "மோரியர் தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு" "வென்வேல், விண்பொரு நெடுங்குடைக் கொடித் தேர் மோரியர்" என்று அகத்தும் புறத்தும் சான்றோர் சிறப்பித்துக் கூறுகின்றார்கள். தென்திசை மாதிரம் முன்னி வந்த இவர்கள் தம் தேர்கள் எளிது வரும்பொருட்டு மலை

பொன்றைக் குறைத்து வழி செய்தனர். இவ்வரிய செயல் பல விடத்தும் உவமிக்கப் பெற்றுளது. இவர்கள் தம் வெற்றியை நிலைநாட்டக் கருதித் தென்றிசை வேந்தர்களை அடிப்படுத்த ஞான்று, பழையன் இம்மோரியரது வரவுக்குச் சிறிதும் அஞ்சுத லின்றிப் பணியா னாயினன். அக்காலத்து இவனுக்குச் சிறந்த படைவலி தந்தவர்கள் மேற்கூறிய கோசர்களே யாவர். எனினும் மோரியரே வெற்றிபெற்றனர். இது ஆசிரியர் மாமூலனாரால்

"வெல்கொடித் துனைகா லன்ன புனைதேர்க் கோசர்
தொன்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்
தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியா மையிற் பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப மோரியர்
புனைதேர் நேமி உருளிய குறைத்த
விலங்குவெள் ளருவிய வரை" என்று கூறப்பெறு

கின்றது.

இங்ஙனம் வெற்றியும் தோல்வியும் பெற்றும் புகழும் வீரமுங் குன்றாது மேம்பட்டுவரும் பழையன், நாம் மேற்குறித்தபடி செங்குட்டுவன் மைத்துன வளவனோடு பகைவனானது காரணமாக அக்குட்டுவனோடும் பகைகொள்வா னாயினன். இஃது ஒரு காரணமாக, அறுகை யென்னும் அரசன் ஒருவன் சோனாட்டுக் குச் சேய்மையி லுள்ளதொரு நாட்டினை யாண்டுவந்தான். அவனால் ஒருதவியும் செங்குட்டுவன் பெறவில்லை யெனினும் அவனைத் தன் "கேள் என மொழிந்து" ஒழுகி வருகையில் யாது காரணத்தாலோ அவ் அறுகை யென்பானுக்கும் பழைய னுக்கும் பகைமை யுண்டாய்விட்டது. செங்குட்டுவன் பழைய னோடு பொருதற்கு இதுவுமோர் காரணமாயிற்று. இவ்விரு காரணத்தாலும் பெருஞ் சினங்கொண்டு செங்குட்டுவன் போர் செய்தலை மேற்கொண்ட செயலை பதிற்றுப்பத்தில் பரணரால் பெரும்பான்மையும் புகழப் பெறுகின்றது.

போர்மேற்கொண்ட செங்குட்டுவன் பழையனது மோகூர் அரண்களைத் தகர்த்து, நகருண் ணுழைந்து அவனது வெற்றி

முரசினைக் கைப்பற்றி அங்கிருந்த காவல்மரமான வேம்பினை அடியோடு தடிந்து முரசு செய்துகொள்ளும்பொருட்டு அதனைத் துண்டங்களாகச் செய்து வண்டிகளிலேற்றிக் களிறுபல பூட்டித் தன்னொடு திரும்பினன். இது,

"நுண்கொடி யுழிஞை வெல்போர் அறுகை
சேணனா யினுங் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்கு
அரண்கள் தாவுறீஇ யணங்குநிகழ்ந் தன்ன
மோகூர் மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்துஅவன் வேம்புமுதல் தடிந்து
முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி
ஒழுகை யுய்த்த (ஆடுநடை யண்ணல்)" என வருவ

தனாலும், இங்ஙனம் எதிர்த்த செங்குட்டுவனோடு பழையன், தன்னிடத்தே யமைந்திருந்த கோசர் ஒழிந்த, வேளிர்பலரும் வேந்தர்பலரும் துணைசெய்யப் பெரும்படை கொண்டு எதிர்த்தும் பயன்பெறா தொழிகின்றான்; துணைசெய்ய வந்த வேளிரும் வேந்தரும் போரிற் பட்டொழிகின்றனர்; ஒழிந்தார் உடலின் குருதி மழைநாட் புனல்போல் பள்ளம் நோக்கிப் பாய்கின்றது; குட்டுவனது வெற்றிமுரசம் நடுவட் சிலைப்ப வாளேந்திய வயவாது பிணங்கள் அக் குருதிப்புனலின் மிதப்ப "மழை யொழுக்கறாப் பிழையா விளையுட் பழையன் மோகூர்" என மாங்குடி மருதனார் புகழ்ந்த விளையுள் வளன் அற நிகழ வாழுநர் பலர் பட்டொழிகின்றனர்; செங்குட்டுவன் கருஞ்சினை விறல் வேம்பறுத்து வென்றி மேம்படுகின்றான்.

"களிறு பரந்தியலக் கடுமா தாங்க
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
எஃகு துரந் தெழுதருங் கைகவர் கடுந்தார் *
வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொசிந்துவரும் மோகூர்"

எனவரும் இது பழையன் வெல்போர் வேந்தரும் வேளிரும் தற்சூழ மொய்வளம் செருக்கி வருதலை விளக்குதல் காண்க. இங்ஙனம்,

a "மொய்வளம் செருக்கி மொசிந்துவரும் மோகூர்
வலம்படு குழூஉநிலை யதிரமண்டி
நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர் *
நிறம்படு குருதி நிலம்படர்ந் தோடி
மழைநாட் புனலின் அவற்பரந் தொழுகப்
படுபிணம் பிறங்கப் பாழ்பல செய்து
படுகண் முரசம் நடுவட் சிலைப்ப
† வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்
கருஞ்சினை விறல் வேம்பறுத்த
பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே" யாமும் செல்லுதும், நீயிரும் வம்மின்" என ஆசிரியர் பரணர் கூறும் பாடற்பகுதி இப் போர்ச்செயலை விளக்குகின்றது.

இனி, செங்குட்டுவன் பழையனது கருஞ்சினை வேம்பினைத் தடிந்து முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி ஒழுகை யுய்த்த செய்தியை உரைகாரர், "முரசுசெய முரச்சி யென்றது அவ் வேம்பினை முரசாகச் செய்தற்கு முற்றுவித் தென்றவாறு. முற்றுவித்தலாவது ஒழுகை யேற்றலாம்படி துண்டங்களாகத் தறிப்பித்தல். களிறென்றது மோகூர்மன்னன் களிற்றினை. களிறுபல பூட்டி யென்றது அவனேறும் யானைகளை அவனை யவமதித்துச் ‡ சாட்டிற்குக் கடாவோபாதியாகப் பூட்டி யென்றவாறு. பூட்டி யென்றதற்கு "வாலிழை கழித்த

a மொய்வளம் செருக்கி யென்பது வலியாகிய செல்வத்தானே மயங்கி எ. று.

* பகைவருடலில் தாங்கள் எறிந்த வேல் முதலிய கருவிகளைப் பறிக்கின்ற காலத்து அவருடைய வுடலுகு குருதியை அணைந்து சிவந்த கையை யுடைய மறவர்.

† நிகழ்ந்து-நிகழவெனத்திரிக்க. வளனற நிகழ்ந்து என்றது: செல்வமானது அறும்படியாகக் கொள்ளை நிகழ எ. று.

‡ சாடு—வண்டி. கடாவோபாதி—கடாக்களையொப்ப

(பக்கம் 232-ல் பார்க்க.) * கைகவர்கடுந்தார்: மாற்றார் படையில் வகுத்து நிறுத்தின கைகளைச் சென்று கவரும் கடிய தூசிப்படை எ. று.

நறும்பல் பெண்டிர், பல்லிருங் கூந்தல் முரற்சியால், குஞ்சர வொழுகை பூட்டி என இதன் பதிகத்து வந்தமையால் அம் மகளிர் கூந்தல் மயிர்க்கயிற்றாற் பூட்டி யெனக் கொள்க'' என்று கூறுதலையும் பதிகத்தையும் நோக்குமிடத்து ஆசிரியர் பரணரால் கூறப்படாத செய்தி யொன்று வெளியாகின்றது. பழையன் செங்குட்டுவனோடு போர்புரிந்த காலத்து வேந்தர் வேளிர் களோடு தானும் வீழ்ந்துபட்டான்; விழவே, அவனது உரிமை மகளிர் பலர் தம் வாலிய இழைகளைக் களைந்து அலமந்து புலம்ப, அவர்களைக் குட்டுவன் பற்றிக் கூந்தல் களைந்து, கயிறு திரித்து, குஞ்சரம் பூட்டிய வண்டியில் அவ் வேம்பின் துண்டங்களைக் கட்டிக் கொணர்ந்தான் என்பது.

இது பரணருக்குத் தெரிந்திருந்தால் அவர் குறியாது விடார். ஏனெனில், நல்லிசைச் சான்றோர்களாற் பாடப்பெறும் புகழ்படைத்த நன்னன் என்பவன் கற்றோரை யாதரிக்கும் கல்விவள்ளலா யிருந்தும் பெண்கொலை யொன்று புரிந்தமையைப் ''பெண்கொலை புரிந்த நன்னன் போல, வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை'' யெனக் குறுந்தொகைக்கண் விதந்து பாடியவர் இப்பரணர் ஆதலால், இவருக்குப் பிற்போந்தவர் பதிகம் பாடுவார் இச் செய்தியை மிகைபடுத்திக் கூறியிருத்தல் வேண்டுமே யன்றி உண்மைச் செய்தி யாகாது என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். இக்கருத்தேபற்றிச் சரித்திர ஆராய்ச்சி வல்லுநரான திரு. P. T. சீநிவாச அய்யங்கார் அவர்கள் இச் செய்தியை மறுக்கின்றனர் * (தொடரும்.)

* "The other lines deal with the fight of the Sera monarch (செங்குட்டுவன்) with Palayan but introduce the story of the elephants being made to pull the blocks of neem timber with ropes made of women's hair. The introduction of this absurd detail vividly shows how men of a later generation tried to improve on a story coming down from old times by letting loose their fancy and inventing stupid embellishments * * * If the original poet had put in this thing in his poem, one might call it an excusable exaggerasion by a flattering courtier; but if a commentor of several hundred years later puts it in, it must be due to unnicensed fancy"——His. of Tamils p. 519-20.

௨

# குடமூக்கிற் பகவர்.

பண்டிதர். அ. கந்தசாமிப் பிள்ளையவர்கள்,
அரசியலார் கல்லூரி, கும்பகோணம்.

யாப்பருங்கல விருத்தியிற் செய்யுளியலி னிறுதியிலே "குடமூக்கிற் பகவர் செய்த வாசுதேவனார் சிந்தம் முதலிய ஒருசார் செய்யுட்களும் எப்பாற்படுமோவெனின், ஆரிடச் செய்யுள் எனப்படும்" என்பது கூறப்பட்டிருக்கின்றது.

சேது வேந்த ரவைக்களப்புலவர் திரு. மு. இராகவையங்காரவர்கள் தமது ஆழ்வார்கள் காலநிலை யென்னும் புத்தகத்து 'இப் பகவர் திருமழிசை யாழ்வாரே' யென ஒருபுனைந்துரை கட்டி நிறுவுகின்றனர். அவ்வுரையின் உண்மைகாணும் பொருட்டு இவை யெழுதலுறுகின்றேன். இப்புத்தகம் ஆங்கில கலாசாலை (பி.ஏ.) வகுப்புப்பாடமாயிருத்தலின் அம்மாணவர்கட்கும், தமிழ் பயிலும் பிறருக்கும் இது ஒரு சிறு பயன் தருமென்பது என் கருத்து.

ஐயங்காரவர்கள் இத் தொடரில் (குடமூக்கிற் பகவர்) பகவர் என்ற சொல்வழியே புகுந்து தம் கொள்கையை நாட்டுவான் அடிகோலுகின்றனர். இதுபற்றி அவர்கள் கூறுவன :—

(1) பகவரென்பது வைணவ சமயத் துறவிகளையே குறிக்கும், பிற சமயத் துறவிகளை யது குறியாமைக்குப் பழைய தமிழ் நூல்கள் சான்று.

(2) அகப்பொரு ளிலக்கணத்து 'ஆற்றிடை முக்கோற் பகவரை வினவுதல்' என்பதிற் குறிக்கப்பட்டவர் வைணவ சந்நியாசிகளே. "எறித்தரு கதிர்தாங்கி" என்னுங் கலித்தொகையும் இவ் வைணவ சந்நியாசிகளையே குறிக்கும்.

(3) தொல்காப்பியர் மரபியலில் "நூலே கரகம் முக்கோல் மணையே, யாயுங் காலை யந்தணர்க் குரிய" என்று கூறியதும் இவ் வைணவ சந்நியாசிகளுக்கே—(ஆழ்வார்கள் காலநிலை; பக்கம் 10) என்பனவாம்.

பகவன் என்ற சொல் திரு, புகழ் முதலிய ஆறுகுணங்களை யும் உடையவன் என்று பொருள்பட்டு எல்லாச் சமயத்தாரும் தத்தம் கடவுளைக் கூறற்குரிய ஒரு பொதுச் சொல் ஆகும். இது "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்னும் முதற்குறளால் இனிதி னுணரப்படும். கடவுள் என்ற சொல் இறைவனையும், அவனருள் வழி நின்ற முனிவரையும் குறித்தல் போலவே பகவன் என்ற சொல்லும் குறிப்பதாம். அதன் பன்மைப் பெயரே பகவர் என்பதும். பழைய தமிழ் நூல்களிற் குறிப்பன என்று ஐயங்கா ரவர்கள் திருவாய்மொழியிலிருந்து உதாரணம் காட்டியது பொருந்தாது; திவ்வியப் பிரபந்தங்கள் பழைய தமிழ் நூல்க ளென்னப்படாமையின். ஆற்றிடை முக்கோற் பகவரை வினுதல் என்பது, தொல்காப்பியம் அகத்திணையியலுரையிலும், பிற இடங்களிலும் சுட்டப்படுகிறது. இங்குப் பகவரென்பது பொதுவாகத் துறவிகளை. முக்கோற் பகவரென்றதனால் பார்ப்பனத் துறவிகளையெனல் வேண்டும். உடன் போகிய தலைவியைச் செவிலி பின்தேடிச் செல்லுங்கால் எதிர்ப்பட்ட துறவிகளைக்கண்டு வினவுவாள் என்றதில் வைணவத் துறவிகளையே வினவுவாள் என்பது பொருந்தாக் கூற்றும். இதற்கு ஐயங்காரவர்கள் காட்டிய

"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயல்மாலைக் கொளைநடை யந்தணீர்"

என்னும் கலித்தொகை (9) வைணவத் துறவிகளையே குறித்த தென்பது பெரும் வியப்பே. இதில், "உறித்தாழ்ந்த கரகம்" எனவருவதனை அவர் நோக்கிலர்போலும். இது ஜைனத் துறவி களுக்கேயுரிய தென்பதை "சிமிலிக்கரண்டையன்" (மணிமேகலை

மலர்—86) " இட்டுவாய்க் கரண்டை, பல்பொறிச் சிமிலி நாற்றி " (மதுரைக்காஞ்சி 482, 3) " உறியுறுகுண்டிகை யொழிய " (பெரிய புராணம், திருநாவுக்கரசு 60) என்பவை புலப்படுத்தும்.

இனித் தொல்காப்பியர், நால்வகை மரபினரியலையும் கூறுமிடத்து " நூலே கரகம் முக்கோல் மணையே, யாயுங்காலை யந்தணர்க்குரிய" என்று பொதுவாக அந்தணரியலை யெடுத்துக் கூறினாரே யன்றி, வயிணவர்க்குமட்டும் வரைந்து ஓரியல் கூறினார் என்பதும் பொருந்தாக் கூற்றேயாம்.

ஆகவே, ஐயங்காரவர்கள் தம் கொள்கையை நிறுவுதற்கு அடிகோலும் பகவர் என்ற சொல் அவர் கருத்தின்படி நிலைபெறுமை பெறப்படுகின்றது.

அடுத்து ஐயங்காரவர்கள் கூறுவன :—

1. ஈண்டுக் குறிக்கப்பட்ட ஆரிடக் கவிகளேல்லாம் ஆழ்வார்களும் நாயன்மார்களும் சேர்ந்த அடியார்களாக விளங்குதல் அறியத்தக்கது. (ஆழ்வார்கள் காலநிலை பக்கம் 25.)

2. பொய்கையார், பூதத்தார், குடமூக்கிற்பகவர்....என்று விருத்தியுடையார் கூறியதும்....(ஷை பக்கம் 43.)

3. பொய்கையார், பூதத்தாரோடும் ஒரு சேரவைத்து விருத்திகாரர் குடமூக்கிற் பகவரைச் சிறப்பித்தலால்...அப்பகவர் ...திருமழிசைப்பிரான் என்று...இருத்தல் கவனிக்கத் தக்கது (ஷை பக்கம் 44) என்பன.

இங்கு, ஆரிடக் கவிவகைக்குக் காட்டப்பட்டவர்களெல்லாம், ஆழ்வார் நாயன்மார்மட்டும் அல்லர்; இன்னும் பலர் புலவர் உண்டு. அவர்கள் முறையே, பொய்கையார், குடமூக்கிற்பகவர், பெருஞ்சித்திரனார், ஔவையார், பத்தினிப்பெண்டு, கபிலர், பரணர், கல்லாடர், மாமூலர், பெருந்தலைச்சாத்தர், திருமூலர், புட்கானார், பூதத்தார், காரைக்காற்பேயார் எனக் காட்டப்படுகின்றனர். பொய்கையாரையடுத்து முதலாழ்வாராகப் பூதத்தார்*

* பூதத்தாரும் காரைக்காற்பேயாரும் பாடிய பாட்டு—என வருதலால் இங்குக் கூறிய பூதத்தார் முதலாழ்வாரோ பிறரோ? என ஐயத்துக்கிடனாய் இருக்கிறது.

கூறப்படவுமில்லை, இவ்விருவரையடுத்துப் பகவரை நிறுத்தி அவரே முதலாழ்வாருக்கு அடுத்த திருமழிசையாழ்வார் என்று கூறுவதும் புனைவுரையாகுமேயன்றி யுண்மை யுரையாகாது.

அல்லதூஉம், இவ்வனைவரையும் இயற்பெயராலே கூறித் திருமழிசையாழ்வாரைமட்டும் பொதுப் பெயரால் அவ்விருத்திகாரர் கூறக் காரணம் யாது? சற்றே ஊன்றி நோக்குமிடத்தில், குடமூக்கிற் பகவரேன்பதும் ஒருவரின் இயற்பெயரேன்பதே இனிதிற் பெறப்படும். அதுவும், காரைக்காற் பேயாரென்றாற் போலக் குடமூக்கிற் பகவரெனத் தெரித்து மொழி கிளவியாகக் கூறியிருத்தலும் அறியத்தக்கது.

இனி ஐயங்காரவர்கள் தம் கொள்கைக்கு உபபலமாகக் காட்டுவது,—அவர் செய்த வாசுதேவனார் சிந்தம் என்பதில், சந்தம் என்பதனையே பிற்காலத்தார் சிந்தமெனத் திரித்துக் கொண்டனர்—என்பது. அதற்குக் கூறும் காரணம்,—

'அறிவுடை நம்பி செய்த சிந்தம்' என்று காணப் படுவதால், இதுவும் (சந்தம்) அதனோடு சேர்ந்தது போலுமென்று மயங்கித் திரித்து வழங்கியிருத்தல் வேண்டும்" (ஷை பக்கம் 45, வரி 1,—6) என்பது.

சந்தம் என்பது யாப்பருங்கல விருத்தியில் ஒருவாற்றானும் அறியப்படாதிருப்பின் அதற்கு உரிய பொருள் காணமாட்டாது சிந்தமெனத் திரித்துக்கொண்டனரெனல் பொருந்தும். "இனிச் சந்தமும் தாண்டகமுமாமாறு" என்று கொண்டு பல்வகைச் சந்தங்கள் அந்நூலுட் காட்டப்படுகின்றமையின் அது பொருந்தாதாம்.

அல்லதூஉம் "வாசுதேவனார் சிந்தம் முதலிய ஒருசார் செய்யுட்களும்" எனவரும் உரையில் உள்ள "ஒருசார்" என்ற சொல்லே, அது சந்தம் முதலிய பிறவற்றின் வேறாய தென்பதனை இனிதிற் புலப்படுத்தும். ஐயங்காரவர்கள் தம் நூலுள் இச் சொல்லை அறவே மறைத்தமையும் வியப்பே.

"சிந்தம் எப்பாற்படுமெனின்...........வஞ்சியடியால் வந்து பொருளுறுப்பழிந்தமையால் உறுப்பழி செய்யுளெனப்படும்" என்னும் யாப்பருங்கல விருத்தியுரையும் இங்குப் போற்றத் தக்கது.

இவற்றால், பகவர் என்ற பெயரானும், பொய்கையாரை யடுத்துக் கூறப்பட்டமையானும், வாசுதேவனார் சிந்தம் பாடின மையானும், குடமூக்கிற் பகவர் திருமழிசையாழ்வார் என்பது பொருந்தாத புனைந்துரை யென்னும் உண்மைகண்டாம்.

(1) இனிக் குடமூக்கிற் பகவர் யாவரெனின், கூறுதும்:— 'குடமூக்கு' என்பதனோடு 'குடமூக்கில்' என்பதும் கும்பகோணத்தின் பெயராம். "சேதாவேறுடை யானமர்ந்த விடம் கோதாவிரி யுறைபுங் குடமூக்கிலே" (திருநாவுக்கரசர்) "கோட்டங் கொண்டீர் குடமூக்கிலுங் கோவலுங் கோத்திட்டையும்" (சுந்தர மூர்த்திகள்) என்னுந் தேவாரத்தானும், பிறர் கூற்றுக்களானும் இதனை யறியலாம். பகவரென்பவர், இக் குடந்தைக் கீழ்க்கோட்டத்து (நாகேசுவரசுவாமி கோயில்) சிவபெருமானை வழிபட்டு நோற்றுப் பேறடைந்த ஒருபெரியார்; சைவர்; முனிவர்.

(2) இக் கீழ்க்கோட்டம் உட்சுற்றில் இப் பகவருக்குக் கோயிலும் இருக்கிறது.

(3) எலும்பு மலராய் இவருக்கு அற்புதங்காட்டிய இடமாகிய காவிரிப் படித்துறை 'பகவர்ப் படித்துறை' யென இவர் பெயரால் வழங்கப்படுகிறது. (இவ்வூர்ப் படித்துறைகளிலெல்லாம் இதுவே சிறந்தது. இது அக்கீழ்க் கோட்டமுடைய பெருமானுக் குரியதாய், விசேட நாட்களிலெல்லாம் அப்பெருமான் எழுந்தருளித் தீர்த்தம் கொடுக்கப்படுகிறது)

(4) இப்படித்துறையில், நடு ஆற்றில் அப்பகவருடைய படிமம் வைக்கப்பட்டிருக்கிறது. நமது ஐயங்காரவர்கள்போன்ற ஆராய்ச்சிக்காரர் வருவார்களேன்று தான் போலும், இவருக் கருகில் ஒரு நந்தியின் படிமமும் வைக்கப்பட்டிருக்கிறது.

(5) இவர் வழிபட்ட பிள்ளையார்கோயில் 'பகவர்ப் பிள்ளையார்கோயில் என்று போற்றப்பட்டு வருகின்றது. அங்கும் இப்பகவருடைய படிமம் கல்லிற் செதுக்கப்பட்டிருக்கின்றது.

(6) விசேட நாட்களில் இந்நீர்த்துறையில் முழுகிக் கீழ்க் கோட்டஞ்சென்று இப்பகவரையும் தரிசித்து அன்பர் மீளுவர்.

(7) மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களாற் பாடப்பட்ட திருக்குடந்தைப் புராணத்துப் 'பகவன் முத்தியடைந்த படலம்' 'பகவ தீர்த்தப்படலம்' என இருபடலங்கள் இவற்றைக்கூறும். இவ்வாறு பிரசித்திபெற்ற இவரே குடமூக்கிற் பகவரென யாப்பருங்கல விருத்திகாரராற் கூறப்பட்டவராவர். இவர் தமிழ்ப்புலமையும் படைத்துச் செய்யுளியற்றும் வன்மையும் உடையவராயிருத்தல்வேண்டும். சைவ இருடியாகிய இவர் பாடிய வாசுதேவனார் சிந்தமென்பது, இத்தலத்தில் (குடந்தைக் காரோண வரலாறு) அல்லது பிறதலத்தில் திருமால் சிவபிரானை வழிபட்டுப் பேறடைந்ததைக்கூறும் சிந்தமென்னும் ஒருவகைச் செய்யுளாகல் வேண்டும்.

இன்னும்,—

பொய்கையாரென்பவர் ஒருவைணவ விருடி; (ஐயங்காரவர்கள் கூற்றின்படி) குடமூக்கிற்பகவர் ஒரு சைவ இருடி. ஆகவே ஆரிடக் கவிப்புலவருக்கு உதாரணங்காட்ட வந்த யாப்பருங்கல விருத்திகாரர் வைணவ இருடியொருவரையும், சைவ இருடியொருவரையும் எடுத்துக் காட்டாகக் கூறுவார், பொய்கையாரையும், அவரையடுத்துக் குடமூக்கிற் பகவரையும் கூறினர் என்பது மிகவும் பொருத்தமுடையதாக விருக்கின்றது.

ஆகையால், குடமூக்கிற் பகவர்வேறு, திருமழிசையார்வேறு என்பது அறியத்தக்கது.

இவற்றால், பகவர் என்பது திருவாய்மொழிக்கு முந்திய பழைய தமிழ் நூல்களிலேயே (வைணவத் துறவிகளை மட்டுமன்றி) பொதுவாக முனிவரைக் குறிக்குமென்பதும், குடமூக்கிற்பகவரென்பது, இயற்பெயரே யாமென்பதும், அவர் திருமழிசையாராகார், வாசுதேவனார் சிந்தமும் அவர்பாடிய சந்தவிருத்தமாகாதென்பதும் பெற்றாம்.

---

# உடல்இயலும் உடல்நல வழியும்.

திரு. சாமி. வேலாயுதம் பிள்ளையவர்கள், B. A., L. T.,
உரத்தநாடு.

(முற்றொடர்ச்சி 196-வது பக்கம்.)

## குமரேச சதகம்.

### வியாதி மூலங்கள்.

கல்லினுன், மயிரினுல், மீதூண் விரும்பலாற்,
கருதிய விசாரத்தினுற்,
கடுவழி நடக்கையான், மலசல மடக்கையான்,
கனிபழுங் கறியுண்ணலால்,
நெல்லினு லுமியினுல், உண்டபின் மூழ்கலால்,
நித்திரைக ளில்லாமையால்,
நீர்ப்பகையி னுற்பனிக் காற்றில்உடல் நோதலால்,
நீடுசருகு இலையூறலால்,
மெல்லிநல் லார்கலவி யதிகமுள் விரும்பலால்,
வீழ்மலஞ் சிக்குகையினுல்,
மிகுசுமை யெடுத்தலால், இளவெயிற் காய்தலால்,
மெய்வாட வேலைசெயலால்,
வல்லிரவிலே தயிர்கள் சாகாதியுண்ணலால்,
வன்பிணிக்கிட மென்பர்காண்
மயிலேறி விளையாடு குகனே! புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே!

நமது உடலின் வலுவின்மைகளும், அவைகளை நீக்கும் வழிகளும் :—இவ்வாறு உடல் நலத்தை ஓம்புவதுடன் நில்லாது நம்முடலின் வலுவின்மைகளையும் உணர்ந்து அவைகளால்

துன்புற்று மாளாதிருக்கவும் வழிதேடிக்கொள்ளவேண்டுமன்றோ? முன் நம்முடலின் அரிய, பாதுகாப்புடைய ஏற்பாடுகளைக்கூறினும். அவ்வேற்பாடுகளையும் ஏமாற்றி எத்துணையோ பேர் இறக்கும் வழிகளையுங் கண்டோம். இவ்வேற்பாடுகளிருந்தும் வீணாகின்ற வெனின் அவை இல்லாத விடங்களில் எத்துணைக் கேடு விளையு மென்பதைக் கூறவேண்டியதேயில்லை. அவ் வலுவின்மைகள் யாவை, அவைகளை நீக்கும் வழிகள் * யாவையென ஆராய்வாம்:- (1) நமது உடலின் மென்மையான உறுப்புக்களெல்லாம் எலும்புக் கூட்டினால் நன்றாய்க் காக்கப்பட்டிருந்தும் நமது பிடரியிலுள்ள முள்ளந்தண்டுப் பங்கு நன்றாய்க் காக்கப் பெறுதிருப்பதால் சிறிது பொழுது வெய்யில் பிடரியில் உரைக்கினும் நாம் மூர்ச்சையாகிக் கீழே விழவேண்டியதாயிருக்கிறது. இதற்கு ஞாயிற்று மூர்ச்சை (Sunstroke) என்று பெயர். நமது தலைமயிர் பின்னால் தொங்கிக் கொண்டிருந்தால் இது வாராமற் காக்கும். அதை வெட்டியும், பின்னியும், தலைப்பாகைக்குள் அடக்கியும் பிடரியைத் திறந்து வைக்கிறோமாதலின் வெய்யில் மிகுதியாய்ப் படாது பாதுகாக்க வேண்டிய கடமை நமக்குளது. இதைச் செலுத்தாததனால் இம் மூர்ச்சை ஏற்பட்டுவிட்டால் அவன்மேல் தூயகாற்றுப் படவிட்டு, இறுக்கிக் கட்டிய துணியை அவிழ்த்துவிட்டு, அவனைத் தூய இடத்திற்குக் கொண்டுபோய்க் குளிர் நீர், குளிர் நீர் ஒத்துக் கொடுத்துத் தெளியவைக்கவேண்டும். (2) நமது முழங்காற் சில்லும் கழுத்துப்பட்டை எலும்பும் வலுவற்று எளிதில் முறியக் கூடியனவாயிருக்கின்றன. முட்டியிட்டு விழுவதால் முழங்காற் சில்லும், ஒருக்கணித்து விழுவதால் கழுத்துப் பட்டை எலும்பும் எளிதில் முறிந்துவிடுகின்றன. இம்முறிவுகள் பெரும்பாலும் காற்பந்து விளையாட்டில் (Foot Ball) உண்டாகின்றன. இவை உண்டாகாமல் கவலையுடன் காத்துக்கொள்ள வேண்டிய கடமையும் நம்முடையதாகும். (3) நேராக நிமிர்ந்து உட்காராது கூனி உட்கார்ந்து முதுகுக் கூனலை உண்டாக்கிக்

---

* இவைகளிற் சில உடலை ஓம்பும் வழிகளில் கூறப்பட்டுள்ளன. இவை நம் வலுவின்மைகளால் உண்டாகின்றனவாதலின் ஈண்டுங் கூறப்பட்டுள்ளன.

கொள்வதே நம்மியற்கையாக இருக்கிறது. இதை மாறு எதிர்ப் பழக்கத்தால் நீக்கிக்கொள்வது நாம் அறிவைப் பெற்றதன் பயனாகும். (4) வயிற்று மூச்சும், நுனிமூச்சுமே எளிதாயிருக்கின்றன. இவைகளை பெரும்பாலும் நாம் பழக்கப்படுத்திக்கொண்டு வருவதால் நம் நெஞ்சு சிறுத்து வலுவற்று உடல் நலனற்றுப் போகிறது. இதை நீக்க உலாவப் போம்பொழுதும், உடற்பயிற்சி செய்யும்பொழுதும், வேறு முற்கூறிய * பொழுதுகளிலும் மூச்சுப் பயிற்சி செய்வதுடன் நினைக்கும் போதெல்லாம் ஆழ்ந்த மூச்சுவிடும் பழக்கம் பண்ணிக்கொள்ளவேண்டும். (5) எல்லா உணவையும் தூயதாய் நச்சு நீக்கி (Sterilise) உண்பதால் நம் முடலுக்கு நச்சுக்கூடுகளை ஒழிக்குஞ் செயலற்று வலுக்குறைகிறது. இதனால் அழுக்குணவை உண்ணவேண்டுமென்பதில்லை. அவ்வாறுண்டால் நோயுற்று மாளநேரும். ஆதலின் கூடியவரை தூயதான உணவையே உண்ணவேண்டுமன்றி யாவற்றையுந் தூயதாக்கியே உண்ணவேண்டுமென்பதில்லை. (6) காப்பி, தேயிலை, புகையிலை, பொடி, சுருட்டு, கள், சாராயம், கஞ்சா முதலிய நச்சுப் பொருள்களைப் பொறுக்கும் வன்மை நம்முடலுக்கு இருப்பதால் இவை சிறிது சிறிதாகப் பழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டுப் பின் நீக்குவதரிதாகிறது; அத்துடன் அதனால் வருங்கேடும் பெரிதாகிறது. ஆதலினால் இவைகளை நம்முடல் பொறுத்துக் கொள்வதால் இவை தீமை தரத்தக்கன வல்லவென்றெண்ணும் அறியாமையை நீக்கி அவைகளைச் சிறிதேனும் பயன்படுத்தாது விடல்வேண்டும். பயன்படுத்துவோரும் அவைகளை நெஞ்ச உறுதியால் அற ஒழிக்கவேண்டும். (7) இவ்வாறே சூடு, குளிர், மிக்கவேலை, களைப்பு, தூசி, மீதூண், பொடியெழுத்துக்களை மிகுதியாகப்பார்த்தல், முதலியவைகளையெல்லாம் நம்முடல் பொறுத்துக் கொள்ளும் இயல்புடையதாதலின் நம்மையறியாமலே நாம் நம் முடலை வாட்டிவிடுகிறோம். இதனால் சடுதியில் கெடுதல் உண்டாகாதிருப்பினும் நாளடைவில் பெருங்கேடு விளையுமென்பதை உணர்ந்து மையமாக இருக்கும்படி வைத்து வாழவேண்டும்.

---

* மூச்சுறுப்புப் படலம். நெஞ்சு மூச்சும், வயிற்று மூச்சும், மூச்சும் என்னும் பத்தி.

(8) இவ்வாறு பல வழிகளினும் உடலை ஓம்பிவரினும் நமக்கு 'சந்ததமும் இளமையோடும்' இறவாமலும் இருக்கமுடியாது. நாம் யாவரும் குழவியாயிருந்து, வளர்ந்து இளமையுடனிருந்து, பின் முற்றி, கடைசியில் கிழவர்களாகி இறக்கவேண்டியவர்களே. ஆனல் உடலை விடாது நற்பழக்கங்களால் பாதுகாத்துவரின் இளமையும் முற்றியபருவமும் நீடித்து நிற்கவும் கிழமையையும் சாக்காட்டையும் விரைவில் அடையாதிருக்கவுஞ் செய்து கொள்ளலாம்; கிழட்டுத் தனத்தின் கொடுமைகளைக் குறைத்துங் கொள்ளலாம். இதற்கு நாம் முற்கூறியபடி உடலியலையும் உடல் நல வழியையும் நன்ருய்க் கசடறக் கற்று அதன்படி நிற்க வேண்டும்.

இந்நூலைப் படிப்பதாலாகும் பயன்:—இவ்வாறு பல வழி களிலும் பயன் படும் இந்நூலைப் படிப்பதாலாகும் பயனைத் தொகுத்துக் கூறுவாம்:—(1) அறிவுநூலிலொன்றை (Science)ப் படிப்பதாலாகும் அறிவு வளர்ச்சி இந்நூலைப் படிப்பதால் உண்டாகிறது; இதுவும் அறிவு நூல்களுட் சிறந்ததொன்ருகலான். (2) ஆனல் இது ஏனைய அறிவு நூற்களைவிடச் சிறந்ததொன்ரு கிறது. எவ்வாறெனின் மற்றவை பெரும்பாலும் பொருள்செயல் வகையைக் குறிப்பனவாகவிருக்க இது அதற்கு முதலாயுள்ள உடலாகிய நமது உயிர் நிலையைக் காத்தற்கு ஏதுவாயிருக்கிறது. திடீரென ஒரு ஊறு நேரின் அவ்வுடலுக்கு முடிவுவாராமல் இது காக்கிறது (அற்றங் காக்குங் கருவியாகிறது). நீண்ட நாள் வலிவு, நலம், இன்பத்துடன் வாழ்வதற்கும் இன்றிமையாததொன்ரு கிறது. (3) இந்நூலைப் படித்து அதன்படி நடப்பதால் மிகப்பல நோய்களை வாராமற்றடுத்துக் கொள்ளலாம். திருவள்ளுவர்

> எதிரதாக் காக்கும் அறிவினர்க் கில்லை
> அதிர வருவதோர் நோய்

என்று கூறியது இந்நூலைக் கற்ற அறிவினேர்க்கே சாலப் பொருந்தும். (4) இந்நூல் காப்பி, புகையிலை, கள், கஞ்சா முதலியவற்றைப் பயன் படுத்துதலையும், கூனியிருத்தல், உடற் பயிற்சி செய்யாதிருத்தல், வாயால் மூச்சுவிடல், மெல்லாதுண்ணல்

குளிர் நீராற் குளியாமை, தூய்மையற்றிருத்தல் முதலிய பலப்பல கெட்ட பழக்கங்களை நீக்கி இதற்குமாறாக எதிர்ப் பழக்கங்களைப் புகட்டிவிடலால் இது உள்ளத்தை

சென்ற விடத்தாற் செலவிடாது தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு

என்ற கூற்றின் இயல்பு வாய்ந்திருக்கிறது. (5) காதைக் குடைதல் ஆடையை இறுக்கிக் கட்டல், பொடியெழுத்துக்களைப் பார்த்துக் கொண்டேயிருத்தல், மருந்து மிகையாக உண்ணல் முதலிய தீய செயல்களால் நம் உயிருறுப்புக்களை (Vital Organs) நலியவைத்து இடர்ப்படுதலை நீக்குகிறது. வேறு துறையில் எவ்வளவு அறிவுடையவனேனும், எவ்வளவு நல்லவனேனும், பணக்காரனேனும், உற்றார் உறவினர் ஆள்வினை உடையவனேனும் இவ்வாறு இந்நூல் காட்டும் நலவழிகளை நாடாதிருப்பானேயாயின் கூற்றுவன் எவ்வாறு

போற்றவும் போகான், பொருளொடும் போகான்
சாற்றவும் போகான், தமரொடும் போகான்
நல்லா ரென்னான் நல்குர வறியான்
தீயா ரென்னான் செல்வரென் றுன்னான்
தரியா னொருகணந் தறுக ணாளன்

என்று கூறியபடி ஒரு நொடியுந்தரியானோ அவ்வாறே அவனுக்கு நோயுந்தரியாது வந்து பின் கூற்றுவனையுங் கூட்டிக்கொண்டு வந்துவிடும். ஆதலின் தெரியாது தீச்செய்கை செய்யினும், தெரிந்தே செய்யினும் இயற்கைக்கு மாறுபாடு கிடையாது. இதனால் இந்நூலைக் கசடறக் கற்பதுடன் நில்லாது அதற்குத் தக்கபடி நிற்கவும் (நடக்கவும்) வேண்டும். இவ்வாறு நிற்போர் உடல்நலங் குன்றாது, மகிழ்ச்சியுடன், நீடு வாழ்வரென்பது கூறவேண்டியதின்று. ஆனாலும் இவ்வுடலை இயக்குவது உள்ளமேயாதலின் அதைப்பற்றியுந் தெரிந்திருத்தல் இன்றியமையாததொன்றும். அதன் விரிவை உள்ள வியல் என்னும் நூலிற்காட்டுவாம். ஈண்டு உடலிற்கும் உள்ளத்திற்கும் உள்ள ஒற்றுமை யின்னின்னவென்றும் உடல் நலத்திற்குரிய உள்ளப் பழக்கங்கள் யாவையென்றுங் காட்டுவாம்.

**உடலுக்கும் உள்ளத்திற்கும் உள்ள ஒற்றுமை :—** நம்முடல் நோயுற்றாலும், மிகுந்தவலியை அடைந்தாலும், மெலிந்து இளைத்தாலும் நம் உள்ளம் நன்றாக வேலை செய்வதில்லை. கள், கஞ்சா, மயக்க மருந்து (Chloroform) நம் உள்ளத்தை மயக்கிச் செயலற்றுப் போகவுஞ் செய்கின்றன. இதற்கு மாறாக அஞ்சல் திடீரென அதிர்ச்சியுண்டாதல் முதலிய உள்ள நிகழ்ச்சிகள் உடலின் உறுப்பாகிய குருதியேற்றத்தை விரைவாகத் துடிக்கச் செய்கின்றன; நாணம் சினம் முஞ்சியைச் சிவக்கச்செய்கின்றன; அச்சம் வெளுக்கச்செய்கிறது; இன்பம் மயிர்கூச்செறியச்செய்கிறது. இவ்வாறு உடலும் உள்ளமும் ஒன்றையொன்று மாறுபடுத்துவது எனெனில் நமது உள்ளம் நமது பெருமூளையில் தான் நின்று நிலவுவதே யாகும். இங்கிருந்துதான் நமது உள்ளம் ஐம்பொறிகளாகிய மெய், வாய், கண் மூக்குச் செவி வழியே வெளிச்செய்திகளை உணர்ந்துகொண்டு தனது கருவிகளாய நாக்கு, கை, கால், எருவாய், கருவாய் வழியே செயல்களைப்புரிகின்றது. இவ்வாறு உடலால் உள்ளமும், உள்ளத்தால் உடலும் இயங்குவதால் ஒன்றையொன்றுபற்றி நிற்பது இயல்பே. ஆதலின் உள்ளத்தால் உடலை நலமுற்று நன்றாகயிருக்கச் செய்ய இயலும். அதற்குத் தக்க வழிகள் மூன்று :—(1) புன்சிரிப்புடனிருத்தல், (2) தூய எண்ணங்களை எண்ணுதல், (3) உள்ளுவதால் (நினைப்பால்) நோய் தீர்த்தல் ஆகும். இவைகளை ஒவ்வொன்றாய் ஆராய்வாம்.

**புன்சிரிப்பினாலாகும் நன்மைகள் :—** நமது உள்ளம் துயரம், கவலை, சினம், வெறுப்பு முதலிய தீய உணர்ச்சிகளை * அடையும் போது நமது உடலும் வருந்தி, நோயுறுவதையும் இவைகளில் ஒன்று அல்லது கவலை சிறிது நீடித்திருப்பின் கிழத்தனம் உண்டாவதையுங் கண்கூடாக் காண்கின்றோம். ஆதலின் இக் கேடுகளை ஒருங்கே நீக்கத்தக்க அன்பையும் அருளையும் அதற்கு அடையாளமாகிய மகிழ்ச்சி, சிரிப்பு, புன்சிரிப்பு என்றிவற்றையும் அடைதல் இன்றியமையாதது. அறிவுடையேம் என்று எண்ணிக்

* அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் முதலிய தீய உணர்ச்சிகளும் உடலைக் கெடுக்கின்றன.

கொள்ளுபவரெல்லாம், அதிலும் உண்மையான உடலியலறிவுடையே‡ மென்பாரெல்லாம் மறை ஞானசம்பந்த நாயனாரின் மறக்கவொண்ணுக் குறளாகிய

அன்பும் அருளும் அறிவுக் கடையாளம்
என்பர் உணர்ந்தோர் சிவன்வாக்கு ஈண்டு

என்பதைக்கொண்டு தாம் உண்மை யறிவுடையோரா என்று தெளிந்துகொளல்வேண்டும். என்ன கற்றவரேனும் இவை யிரண்டும் இல்லார் அறிவுடையோராகார். இவை யிரண்டும் உண்டேல் அறிவு விளங்குவதுடன் மகிழ்ச்சியும், சிரிப்பும், புன்சிரிப்பும் இடைவிடாது உண்டாகிக்கொண்டே இருக்கும். இதற்கு மாறாக ஒருவன் என்வரினும், எத்துன்பம் நேரினும்

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்

என்னும் பொய்யா மொழியை மெய்யாக்கொண்டு புன்சிரிப்புக் கொள்ளின் தாமாகவே மகிழ்ச்சியும், அன்பும், அருளும் அவற்றால் அறிவும் உண்டாகும். இவை மட்டுமா? அவற்றால் உடற்கும் வரும் நன்மைகளாவன :—(1) குருதியைச் சூடாக்கிக் குருதி ஓட்டத்தை நன்றாய் நடக்கச்செய்கிறது. (2) அது முதுகை நோக்கி வலுப்படுத்தி உள்ளத்திட்பத்தை உண்டாக்குகிறது. (3) அது ஒருவனைச் சுறுசுறுப்புடனும் விளக்கத்துடனும் வாழும்வண்ணம் தூண்டுகிறது. (4) அது நம் உடல் நல நிலையைக் குறிப்பதன்றி நோயுற்றிருப்பினும் நோயை நீக்குகிறது. (5) அது நமக்கு மகிழ்ச்சியையுஞ் செல்வத்தையுங் கொடுப்பதன்றிப் பிறரையும் மகிழ்ச்சியடையச் செய்கின்றது. ஒருவனுடைய வாழ்வு அவன் அடைந்த மகிழ்ச்சியின் அளவைப் பொறுத்தே யிருக்கின்றதெனின் இவ்வாறு நம்மையன்றிப் பிறரையும் மகிழ்ச்சி செய்யவேண்டிய இன்றியமையாமை நன்கு விளங்கும்.

---

‡ ஏனெனில் மற்றைய அறிவுடையவரை விட உடலறிவுடையோரே அதனைப் பாதுகாப்பதற்கு வழிதேடுவோராவர்.

தீய எண்ணங்களை எண்ணுவதாலாகும் தீமைகள் :—நமது உடலுக்கும் உள்ளத்திற்கும் உள்ள ஒற்றுமையை விளக்குவதில் சிறந்தன பெண் வெறி (காமம்) யால் உண்டாகுந் தீமையும் அதை விலக்குவதால் உண்டாகும் நன்மையுமேயாம். இவ்வெறி முதலில் உள்ளத்தே எண்ணங்களாகத்தோன்றி, கிளைத்து விருப்பமாகமாறிப் பின்னும் பெருகி வெறியாகி உள்ளத்தை எப்பொழுதுங் கொள்ளை கொள்ளுகின்றது. இது இருவகையான தீயவழிகளுள் ஒன்றில் செலுத்துகிறது :—(1) இளைஞர்கள் இவ்வெறிக்கு உள்ளாயின் அவர்களுக்கு முதலிற் கனவிலும் * பின் நனவிலுங்கூட நம்முடலின் சத்துக்களிற் சிறந்ததாகிய வெள்ளை (சுக்கிலம், ரேதஸ்) வெளிப்படும். ஒரு துளி வெள்ளை உண்டாக எண்பது துளி குருதி தேவையெனின் உடலிற்கு எத்துணை இழப்பு! இவ்வெறி முற்றமுற்ற நாள்தொறும் வெள்ளை வெளிப்படுமாதலின் இதனல் உண்டாகும் தீமைக்கு அளவேயில்லை! உடல் வலிவு குன்றிவரும். வலிவு மட்டுமா? வளர்ச்சியுங் குன்றும்; நலங்குன்றும்; நோய்மிகும். இன்னும் அறிவு, ஆண்மை, அழகு, திறமை, நற்பண்பு யாவுங்குன்றும். ஆண்டுங்குன்றி பித்தும்பிடித்துச் சடுதியில் இறக்கவும் நேரும். இத்தீக்குக் காற்றும் உதவியதுபோல் சிலருக்குக் கூடாநட்பும், கெட்ட பழக்கங்களும், செய்கைகளுஞ்சேர்ந்து பெருங்கேட்டை விளைவிக்கும். (2) இளைஞர்களன்றிப் பெரியார்களுக்கு இதே பெண் வெறியானது இணைவிழைச்சில் பெருவிருப்பை யுண்டாக்கித் தம் மனைவியன்றிப் பிறர்மனை, வரைவின் மகளிர் முதலியோரிடத்துப் பழக்கத்தை மிகையாக்கி முற்கூறிய கேடுகள் அனைத்தையும் ஒருங்கே சேர்ப்பிக்கும். இவை மட்டுமா? பகை, பழி, அச்சம், மறம் இவைகளை உண்டாக்கிக்கொண்டும் அவ்வெறிவிடாது அவனைக் கொலை, தற்கொலை, களவு, அளறு (நரகம்) முதலியவற்றிற்கும் ஆளாக்கும். என்ன கொடுமை!

---

* சில தூய உள்ளமுடையோர்க்கும் இது தூக்கத்தில் வெளிப்படலாம். ஆனால் இது அடிக்கடி உண்டாகாதாதலானும், உடலில் இயற்கையாகவே வெள்ளை ஊறி வெளிப்படும் தன்மை உண்டாதலானும், இதனல் உடல் வலிவு, வளர்ச்சி குன்றாது; வேறு கேடுகளுமில்லை.

நல்ல எண்ணங்களை எண்ணுவதாலாகும் நன்மைகள் :— இக்கொடுமையிலிருந்து நீங்குவதே அறிவுடைமையாகும். இதற்கு அடிப்படை எண்ணங்களைத் தூய்மையாக்கிக் கொள்ளுதலாகும். எண்ணங்களிலிருந்தே விருப்பமுண்டாகிப் பின் அவை வெறியாக முற்றுவதால் கெட்ட எண்ணங்கள் வரும்போதெல்லாம்* மிகக் கவலையுடனும் முன் எச்சரிக்கையுடனும் உள்ளத்தைக் கடவுளிடத்து அன்பாகவோ அல்லது ஏழை, எளியோர், உடன் பிறந்தார், சுற்றத்தார் முதலியோரிடத்து அன்பாகவோ திருப்பல் வேண்டும். இத்திய எண்ணங்களை எழுப்பக்கூடிய சுவடிகளையும் வரலாறுகளையும் படித்தலாகாது; அத்தகைய கூத்துக்களையும் ஓவியங்களையும் பெண்களையும் விருப்பத்துடன் பார்த்தலாகாது; அவர்கள் விருப்பத்துடன் கூறும் மொழிகளையும், தீய சொற்களையும் பாடல்களையுங் கேட்கலாகாது; பெண்களுடன் அதிலும் அவர்கள் தனியாயிருக்கையில் பழகலாகாது; அவர்களைத் தாயாகக் கருதுதல்வேண்டும். இவ்வாறெல்லாம் இருப்பவனைப் போல் அறிவும், ஆண்மையும், உடல் நலனும், அழகும், வலிவும், திறமையும், நற்பழக்கங்களும், நன்னண்பர்களும், செல்வமும், ஆண்டும் உடையவனைக் காணமுடியாது. இவை மட்டுமா? அவனுக்குப் பிறக்கும் குழந்தையும் இத்தகை நலங்களெல்லாம் ஒருங்கே எய்தியதாயிருக்கும். ஏனெனில் நமது உடலில் ஊறுகின்ற வெள்ளைதான் குழவி பிறப்பதற்கு வித்தாயிருக்கிறது. இவ்வெள்ளையும் வலிவுள்ள, நற்பழக்கங்கள் நிறைந்துள்ள உடலில் ஊறினால்தான் வலிவுள்ள குழவிக்கு வித்தாயிருக்கும். ஆதலின் தனக்கு நல்ல பிள்ளைகள் பிறக்கவேண்டும் என்னும் எண்ணமுடையோன் நல்ல எண்ணங்களை எண்ணுதலானும், நல்ல பழக்கங்களானும் தனது வெள்ளையை எவ்வளவு வலிவு படுத்திக் கொள்ளவேண்டுமென்பது நன்கு விளங்கும்.† இவ்வாறு வலிவு படுத்திக்கொண்டோரின் பிள்ளைகளைப்பார்த்தே ஏனையோர் 'இவன் றந்தை என்னோற்றான் கொல்?' என்று வியப்புறுவர். இது

---

* அப்பொழுது மூச்சைச்சீறி வெளித்தள்ளினும் அவ்வெண்ணம் விலகும். † இவ்வாறில்லாதாருக்கே பிள்ளைகள் பிறப்பதில்லை; பிறந்தாலும் கூன், குருடு, செவிடு, பேடு, அறிவிலியாக விருக்கின்றன.

மட்டுமா? நம்முடலில் வெள்ளை முதிரத் துவங்குகிற பதினாறுவது ஆண்டுமுதல் பன்னீராண்டு மேற்கூறியவாறு நல்லெண்ணங்களால் நோற்பவருக்கு உடலில் அறிவுநரம்பு (மேதநாடி) என்றொரு நரம்பு புதிதாய் முளைக்கிறது. இதன் உதவியாற்றான் எத்துணைப்பெரிய சுவடியையும் ஒருமுறை படித்தாலும் அல்லது கேட்டாலும் அது முழுவதும் அப்படியே உள்ளத்துள் ஊன்றிக் கொள்ளும். இவ்வரிய திறமையுடையோனுக்கே ஒரு முறையில் உணர்வோன் (ஏகசந்தகிராகி) என்று பெயர். இவ்வாறு விளங்கியோர் முதற்சங்கராச்சாரியார், இராமகிருஷ்ண பரமஹம்ஸர் சுவாமி விவேகாநந்தர் முதலியோராவர். இவ்வாறு பன்னீராண்டு நோற்றோரே இறைவனுடன் இரண்டறக் கலப்பதற்கு வழி காட்டும் எட்டுறுப்புநெறி (இராஜயோகம்), வினைநெறி (கர்மயோகம்), அறிவுநெறி (ஞானயோகம்), அன்புநெறி (பக்தியோகம்) முதலிய நன்னெறிகளை நாடுவதற்கும், உடலினை நோயின்றி அளவிறந்த வலிவு, திறமையுடன் இயக்கிப் பல்லாண்டு பல்லாண்டாக வாழத் தகுந்த வழிகாட்டும் பிடிவாதநெறியை (ஹடயோகம்) நாடுவதற்கும் உரித்தானவராவர். இவ்வாறான பேரின்பங்களை அடைதற்குப் பெண்வெறி முதலியவற்றைத் துறத்தல் இன்றியமையாதாதலின் வள்ளுவனாரும்

> வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்
> ஈண்டியற் பால பல *

என்றார்.

உள்ளத்தின் முயற்சியால் நோய் தீர்த்துக்கொள்ளல் :— இவ்வாறு உடல் நலவழிகளை நாடலினாலும், புன் சிரிப்பினாலும், உள்ளத் துறவினாலும் உடல் நலமுற்றிருந்தாலும் வினைவழியால் நச்சு உயிர்கள் தீண்டுவதாலும், நம் எச்சரிக்கையுந்தப்பிச் சில எதிர்பாராத வழிகளால் நோய் உண்டாவதாலும், அவைகளைத் தீர்த்துக்கொள்ள வழி தேடவேண்டியதாயிருக்கிறது. இவற்றுள்

---

* இதன் பொருளாவது :—தூய இன்பங்கள் பல வேண்டுமானால் அவை உண்டாகும்படி பெண்வெறி முதலிய சிற்றின்பங்களை நீக்குங்கள். அவ்வாறு நீக்கியபின் நீங்கள் அடையக்கூடிய இன்பங்கள் பலவாகும்.

நச்சு உயிர்கள் தீண்டுவதற்குத் தக்க மருந்துகள் முன்னர்க் கூறியுள்ளோம். என்றாலும் அம்மருந்துகளின்றியே மறை மொழிப் பயிற்சியாலும் (மந்திரம்) அந்நச்சுக்களை நீக்குவதைக் கண்கூடாக் கண்டிருக்கிறோம். என்ன அருமை! நச்சுயிர்கள் நம் குருதியில் செலுத்திய நச்சுக்களால் சிலவேளைகளில் (நல்ல பாம்பு நச்சால்) குருதிஉறைந்து கறுத்தும், நரம்புகள் மழுங்கியும், உடல் சோர்ந்தும் போகவும் அந்நச்சை நீக்கி, குருதியை இளகச்செய்து, நரம்புகளை உணரச்செய்து மூச்சையும் உண் டாக்குவன (வேறொருவர் நோயாளியின் உடலோடு தண்டா திருந்து உள்ளத்தின் முயற்சியால் சொல்லுகிற) மறைமொழியும், ஆழ்ந்த நினைப்புமேயெனின் உள்ளத்திற்கும் நம் உடலன்றி வேறு உடலுக்கும், அவற்றின் வேறு பொருளாகிய நச்சிற்குங் கூடத் தொடர்பு உண்டாகக் கூடுமென்பதைப் பயில்முறையால் (Experiment) இதைவிட வேறு எவ்வழியில் காட்டக்கூடும்? ஒருவர் கால் கையில் சுளுக்கேறியிருக்க மற்றொருவர் தன் கால் கையில் வழித்துக்கொள்வதால் அச்சுளுக்கை நீக்குவதும், ஓரூரில் தேள்கொட்ட வேறூரில் உள்ள மறைமொழியாளன்பேரைச் சொல்லி அடைக்கலம் புகுவதால் அவனிடம் வந்து மறைமொழி யால் நச்சு நீக்கிக் கொள்ளும்வரை தீமை நேராதிருப்பதும் இதனையே இன்னும் அருமையாக விளக்குகிறது. இஃது இவ்வாறாக நம் உடலையே நச்சுயிர்கள் தீண்டுவதாலாகும் தீமை யையும் நம்முடற்குவரும் எல்லா நோய்களையும் தீர்த்துக்கொள்ளத் தக்க எளிய, அருமையான, கட்டாயம் பயன்தரக் கூடிய வழியை நந்தமிழ்ப் பெரியார் கண்டெழுதி யிருக்கின்றனர். அந்நெறி வருமாறு:—

* வாயுவா யாமந் தானுந் தவறுறின் வருத்த மாக்கு
நோயுறு முற்ற நோய்க ணுங்குத னுவலக் கேண்மோ
தேயுவைத் தியானஞ் செய்யச் செறிந்தநோ யங்கந் தன்னின்
மாயுமே வாத ரோக மனத்தகத் தொருமை வாய்த்தே. (1)

* இப்பாட்டுக்கள் மறைஞானசம்பந்த நாயனார் இயற்றியுள்ள சிவ தருமோத்திரம் என்னும் நூலில் சிவஞானயோகவியலில் உள்ளன. (59-63) இவை மூச்சுப் பயிற்சியால் உண்டாகும் நோய்களை நீக்கக்கூறியதேனும் ஏனைய வழிகளால் வரும் நோய்களுக்கும் ஆகும்.

அங்கியான் வருத்த முற்ற வவயவ மதனி லாழ்ந்த
பொங்குதண் புனலைச் சிந்தை புரிந்திடிற் பிரிந்து போகும்
பொங்குதண் புனலாற் றுன்பம் பொருந்திய வுறுப்புத் தன்னி
னங்கியைத் தியானம் பண்ண வல்லவர்க் கழியு மந்நோய் (2)

உற்றிடி னுதாந் தன்னி னுதாசன னுற்ற போதே
பற்றுக வமிர்த வெள்ளப் பாவனை யதனாற் பாறு
மற்றைய வுதக வேட்கை வரினு மிவ்வாறு செய்க
வற்றிடு மறலின் வேட்கை யாகமுங் குளிரு மன்றே. (3)

உற்றநோ யுடலி னூடி யுணர்ந்தபின் விபரீ தத்தைப்
பற்றுக பாவகத் தாற் பற்றிய வுறுப்பி னோய்கள்
அற்றிடு மைவர் வீர மடக்கியே யவாவு மாய்த்த
நற்றவர் புரிக விந்த முறையினைப் பலிக்கு நாளும். (4)

கடுவெயிற் றாவ மெய்யிற் கடித்திடிற் கனலு மந்த
வுடலெல்ல மமிர்த தாரை யொழுக்கியே நனைக்க வுள்ளத்
திடமுளான் றனக்கப் போதே தீர்ந்திடும் விடமு மற்றை
விடமுறும் போது மிந்த நினைவுறின் விரைந்து மீளும் (5)

இதன் பொருள் யாதெனின் :—ஒருவன் உள்ள ஒருமைப் பாட்டை யுடையவனாய் உடலில் நெருப்பு எரிவதாக நினைத்துவரின் வாதநோய் நீங்கிவிடும்; சூட்டு நோயை உடைய உறுப்பில் குளிர்ந்த நீரை நினைக்க அது நீங்கும்; குளிர் நீரினால் உண்டாய நோயை நீக்க நெருப்பை நினைக்க வேண்டும்; அந்நெருப்பும் குருதி நெருப்புஞ் சேர்ந்து நோயுண்டாக்கின் வெள்ளையிருக்கு மிடத்திருந்து மருந்து (அமிர்தம்) புறப்பட்டு எங்கும் நனைப்பதாக நினைக்க நீங்கும்; நீர் வேட்கை உறினும் அவ்வாறே செய்க. ஐம்புலனையும் அடக்கி அவாவறுத்த நோன்புடையோர் இவ்வாறு எவ்வுறுப்பில் நோய் வரினும் நினைப்பினால் மாற்றிக் கொள்ள லாம்; இவ்வாறே கொடிய பாம்புகளும் ஏனைய நச்சுயிர்களுங் கடித்தாலும் முற்கூறியபடி மருந்தால் உடலெல்லாம் நனைந்ததாக உள்ள உறுதியுள்ளோன் நினைத்து நீக்கிக் கொள்ளலாம். (இவ் வழிகள் உள்ள வலிமை யுடையோர்க்கே பெரிதும் பொருந்துமெனினும் ஏனையோரும் சிறிது சிறிது பழக்கத்தால் சிறு நன்மையேனும் அடையக்கூடுமென்பது ஒப்பக்கூடியதே.)

உடம்பினைப் பெற்ற பயன் :—இவ்வாறெல்லாம் நோய்களை நீக்கி உடலினை ஓம்பிப் பல்லாண்டு வாழ்வது எதற்காக? நமக்கு உழைத்தோர்க்குத் திருப்பி உழைக்கமட்டுமா? அன்று! நம்வழியை விளங்கச் செய்வதற்கு மட்டுமா? அதுவுமன்று!! பின் எதற்கெனின், நம் மூதாட்டியாகிய ஔவையார்

உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினில் உத்தமனைக் காண்

என்று கூறியுள்ளபடி நம்முளே கோயில் கொண்டெழுந்தருளியிருக்கின்ற இறைவனைக் கண்டு களிக்க வேண்டும் என்றே! அவ்வாறு காண்போமாயின் நம்முளன்றி 'பார்க்குமிட மெங்கும்' அவனே நீக்க மற நிறைகின்றதைக் காண்போம். அப்பொழுது தான் 'யான் பெற்ற வின்பம் யார் பெற்றார் தோழீ?' என்று பாட வியலும். அதன் பின் எல்லாரு மின்புற்றிருக்க நினைப்பதன்றிச் செய்யவும் முடியும். முடிவில் முடிவிலின்பத்தழிவில் வீடும் அடைவோம். இத்தகைய முடிவை அடைய முயலாது மண்ணிலும், பெண்ணிலும், பொன்னிலும், அறத்திலும், பொருளிலும், புகழிலும் இன்னோரன்ன பலவற்றிலும் விருப்பை வைத்துழல்வோமேயாயின் இறைவன் நம்மை எதற்கென்று அருளுடன் படைத்தனரோ, நாம் எதை அடைய விரும்ப வேண்டுமோ அதையடையாது வேறு வழியிற் சென்று துன்புறுவதன்றி ஒரு கிடைப்பதற்கரிய இடம்பாட்டை (சந்தர்ப்பத்தை) இழந்தவர்களுமாவோம். இவ்விடம்பாடு கிடைத்தற்கரிதென்பதையும், கிடைத்துள்ள இப்பொழுதைத் தவறவிடாது முட்டின்றி முயன்று 'நிலமிசை நீடுவாழ' வழிதேடவேண்டுமென்பதையும் பலப்பல பெரியோர்கள் அறிவுறுத்தியிருக்கின்றனர். அவருள் நம் தாயேயனைய தாயுமானார்

எண்ணரிய பிறவிதனுள் மானிடப் பிறவிதான் யாதினும்
அரிதரிது காண்

இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ எதுவருமோ
அறிகிலேன்

என்றும் 'தேகம் நீங்கு மென வெண்ணிலோ நெஞ்சந் துடித்த யருவே' னென்றுங் கதறியுள்ளர். இத்தகைய கவலையுடன் நாமும் அடைய வேண்டிய முடிபு இன்னதென்பதையும் அதை அடையும் வழிகளின்ன வென்பதையும் 'உயிரியல்' என்னும் நூலில் விளக்குவாம். ஈண்டு நாம் அறிவைப் பெருக்கியே (ஞானத்தா லேயே) மெய்யறிவுடையவனை அடையக்கூடுமென்பதையும், அவ்வறிவை யடையத்தக்க நூல்களைக்கேட்டு அல்லது படித்து நினைத்துத் தெளியவேண்டுமென்பதையும் அவ்வாறு தெளிந்தபின் பயனாக அவன் திருவடியையே தொழுது தொண்டாற்றிக் கொண்டே யிருக்கவேண்டு மென்பதையும் சுருங்கக்கூறி முடிப்பாம்.

கற்றதனா லாய பயனென்கொல்? வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.

இறையருள் வாழ்க ! வாழ்க !! வாழ்க !!!

---

# கபீரடியாரும் கடவுள் வழிபாடும்.

---

திரு. E. R. அங்கப்பா அவர்கள்,
மாணவர், ஆசிரியர் பயிற்சிக்கூடம், தஞ்சை.

---

கபீரென்பார் காசிநகரின்கண் நெசவுத்தொழில் புரிந்து வந்த ஓர் எளியாராவர். ஆயினும், அவர் சின்னாட்களில் இந்தியர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவருமாவர். இந்நாட்டிற் றோன்றிய பெரியார்களின் வரலாறுகளில், ஐயமின்றி நம்மால் அறியப்படுவன ஒரு சிலவே யாம். கபீரடியார், எப்போது,

எங்கே, எச்சமயத்தில், எக்குடியிற் பிறந்தார்? இல்லறம் பூண்டு இனிது வாழ்ந்தனரா? அன்றித் தனித்து வாழ்ந்து தவவாழ்க்கை மேற்கொண்டனரா? என்னும் வினாக்களுக்கு விடையளிப்பன, அன்னார் பெயரைப் பற்றிய சில கட்டுக் கதைகளேயன்றிப் பிறவன்றும். அன்னாரின் வரலாற்றாசிரியர் ஒருவர், "அன்னார் காசியிற் சின்னாட்கள் வாழ்ந்து பின் மகாரில் மாண்டனர் என்னு மிரண்டேயன்றிப் பிறிதொன்றும் உறுதியாயுரைத்தல் இயலாதென்பது மிகையன்று" எனக் கூறுகின்றார். ஆகவே இவ்வுரை, அன்னாரியற்றிய பாக்களைத் துருவியாராயுமாறு நம்மைத் தூண்டாநிற்கின்றது.

கபீரின் வரலாற்றாசிரியர்களிடையே, அன்னார் மகமதிய ராய்ப் பிறந்தனரா, அன்றி இந்துவாய்த் தோன்றினரா என்னும் ஐயப்பாடு மிக்குள்ளது. அன்னார்பெயர் மகமதியருடைய தாகலின் அன்னார், நெசவுத்தொழில் புரிந்துவந்த ஓர் மகமதியாற் புரக்கப்பட்டவர் என்பது ஒருவாறு பொருந்தும். ஆனால் அவரியற்றிய பாக்கள் இந்துமத நூல்களையுங் கொள்கைகளையும் தழுவியனவாக வுள்ளன. இவ்வாறு பாக்களியற்றல், இந்துக்க ளாய பண்டிதர்களின் பற்றுக்கோடின்றி அங்ஙனி யியலாதாம். அன்னார்தம் தாய்மொழி இந்தி யென்பதும் நமக்குப் புலனு கின்றது. அறிஞர் அகமத்ஷா கூறும் வண்ணம், கபீரின் தந்தை ஓர் பார்ப்பனராக விருந்தும், அத்தந்தையானவர், ஏதோ சில காரணங்கள்பற்றி அவரைத் தன் மகனென வெளியிட மறுத்திருப்பர்போலும். கபீரின் பாக்களில் மகமதியமதக் கொள்கைகளும் காணப்படுகின்றன. அன்னார், இவற்றைக் காசியில் நெசவுத் தொழிற்கூடங்களிற் சந்தித்த மகமதியத் துறவிகளின் கூட்டுறவாற் பெற்றனராகலாம்.

* இவ்விரண்டு காரணங்களும் அன்னாரை இளமையிலேயே, 'கடவுள் ஓர் வகுப்பார்க்கோ அன்றி ஓர் மதத்தார்க்கோ உரியா ரல்லர்; யாவர்க்கு முரியார்' என்னுங் கொள்கையைக் கொள்ளச் செய்தன. கட்டுப்பாட்டைக் கடந்து பரந்த நோக்கங்கொள்ளும்

* 1. இந்துமதநூல் வல்லோர் கூட்டுறவாற் பெற்ற கொள்கைகள்
2. மகமதியமத நூல் வல்லோர் " " "

ஒருவர் உள்ளத்தில், அண்மையிலோ அன்றிச் சேய்மையிலோ, 'குறித்த கொள்கைகளை நம்பவேண்டுமெனப் பிறர் கூறக்கேட்டு நம்புவதா? அன்றி, அவை உண்மையெனப் பிறரான் மெய்ப்பிக்கப்பட்டபின் நம்புவதா?' என்னும் ஐய வினா எழுவியல்பே. ஒவ்வோர் தலைமுறையும் புதுக்கொள்கை வேட்கையுடன் பிறக்கின்றது. இவ்வேட்கையைக் காணும் முதியோர் பலர், 'புதுக் கொள்கைகள் பரவின், பழங்கொள்கைகள் அடியோடழிக்கப் படுமே' என்னும் அச்சத்தை அடையாநிற்பர். இன்னோர், புதியனபுகுதலை விரும்பாராகி, தம் பழங் கொள்கைகளை 'உண்மையோடு' அதினும் அறியாமையோடு காக்க முந்துவர். ஆனால் ஒவ்வோர் தலைமுறையும் புதியன புகாமல் பண்டையோர் கொள்கைகளையே பற்றி நின்றிருந்திருப்பின், மானிடர் யாவரும் அறியாத்தன்மையிலேயே அழுந்தி நிற்க நேர்ந்திருக்கும்.

மற்றோர் சாரார், கொள்கைகளை நம்புமாற்றானேயன்றிப் பிறிதொன்றானும் தம் மனதைக் களிக்கச்செய்ய விரும்பார். இன்னோர், உடலை வருத்தியேனும் உண்மையைக் காணல்வேண்டும். உண்மையைக் காண்டலிலேயே வாணாள் முடிவுறும். அவ்வுண்மையைப் பெறலும் எளிதன்று. அது, பொறுமையுடனும், மன ஒருமையுடனும், உடல் வறுமையுடனும் தேடச் சிறிது சிறிதாய் அடையப் படுவது. அது நம்முன் நம்மை விளித்தபடியே உலவா நிற்கின்றது. ஆயினும், அது நம் அறிவின்மையான் மறைக்கப்படுகின்றது.

கபீரதுள்ளம் இறைவனை இறுகத் தழுவியதாதலின், சாதி, குலம், சமயச் சடங்குகள் ஆகிய யாவற்றையுங் கடந்து, அவற்றின் மேலாய இவ்வுண்மையை நாடிநின்றது. "உண்மையை நாடும் ஊக்கமொன்றே உயர்வைத் தந்திடும். யான் யாண்டும் இவ்வூக்கத்தின் ஊழியனாவேன்" என்றும், "ஓ சாதுவே! கடவுள் உயிர்களின் மூச்சுக்காற்றே. துறவியின் சாதி துணிதற்கின்று. அந்தணனும், அரசனும், வணிகன் முதலாம் முப்பத்திருவகைச் சாதிகள் யாவும் கடவுளையடையவே கவலை கொள்ளுகின்றன. இந்துக்களும் மகமதியர்களும் இம் முடிவையே

யடைந்துள்ளனர்'' என்றும், "ஏவலாள! எம்மை எங்கே தேடுதி ? யாம் நின் அருகிற்றானே அமைந்துள்ளோம்! யாம் கோயிலினில்லே ; காசியிலில்லே ; அன்றிக் கைலேயினுமில்லே. யாம் மசூதியிலில்லே ; மற்றச்சடங்கினுமில்லே. எம்மை நீ உண்மையில் தேடின், உடனே காணுவை'' எனவும் கூறிய வாற்றான் அவாது உள்ளத்தின் உயரிய நிலேயை அறியலாகும். அன்பு, ஆவல், அழகு இவற்றை ஆராய முயல்வதே கடவுளேக் காண்டற்கு அடிப்படை யெனவும், அதனாலேயே ஒருவன் தன்னேக்காணல் கூடுமெனவும் அவர் கண்டார். ஒரு சமயாசிரியர், "மானிட வுயிர்கள் எத்துணே உளவோ அத்துணே வழிகள் கடவுளேக் காண்டலினும் உள'' எனப் புகன்றுள்ளார். அதற்கிணங்கக் கபீரடியாருக்கு, கடவுள், ஒவ்வொரு மானிட வுடலினு முள்ள வராய், காணமுயல்வார்க்குக் காட்சியளிப்பாராய், அவ்வாறு கண்டார் அழுந்தி ஆநந்தித்தலன்றிப் பிறர்க்கு இன்ன தன்மைய ரென்றெடுத்துரைக்க இயலாதவாறு உள்ளவாராய்க் காணப்பட்டார்.

ஆனல், இத்துணேத் தனித்த கொள்கையைக் கொள்ளும் ஒருவர், ஒருபோதும் வருத்தமின்றி வாழ்கின்றாரில்லே. கபீர் காலத்திலும், சீர்திருத்த வெறுப்பாளர் பலர் தம் வேலேகளேத் துவக்கினர். இளமையிலேயே, கபீர், இந்துமதம் மகமதியமதம் ஆகிய இரு சமயக் கோட்பாடுகட்கும் இணங்க மறுத்தாராகலின் இரு மதத்தார்களேயும் பகைத்தவராயினர். ஆகவே, அவாது தனித்த கொள்கைகட்காக அவாது தலே கொய்யப்படல் வேண்டு மென மன்றாடினர். ஆயினும் சிக்கந்தர்லோடி எனுமச் சீரிய அரசன், விரிந்த கல்வியும் பரந்த நோக்கமுங் கொண்டோனுதலின், அப்பெரியாரை அன்பாய் நடத்தின னென்ப.

கபீரடியார், இக்காரணம்பற்றித் தந் தொழிலேப் புறக்கணித் திலர். அன்னர் வாணுட்கள் முழுதும் இயற்கையும் சுறுசுறுப்பும் இயைந்து விளங்கின. "பலதொழில்கட்கிடையேயும் உறுதியை நிலேநிறுத்துவோனே உண்மைச் சாதுவாவன்'' என்பது அன்னர்தம் அரிய அமுத மொழிகளி னென்று. அன்னர்தம் வாழ்க்கையைப்பற்றி, இது காறும் ஐயப்பாடின்றி யாதும்

கூறப்பெற்றிலது. சில கட்டுக்கதைகட் கேற்ப, அவர் மணமின்றி வாழ்ந்தாரல்லர்; இல்லறச் சகடத்தை இனிதுய்த்தவ ராவர். "ஓ சாதுக்களே! காவியுடுத்துக் காட்டினில் வாழலெதற்கு! என்னுளம் பூரித்துப் பொங்கி யெழுவதை நோக்குமின். யான் கண்களை மூடினேனில்லை; காதுகளைக் கட்டினேனில்லை; உடலையும் ஒறுத்தேனில்லை; திறந்த கண்களுடனும் நிறைந்த புன்சிரிப் போடும் அவன்றனழகை யாண்டும் காண்கின்றேன். காணு மெதுவும் கடவுளேயாகின்றது. செய்யு மெதுவும் அவன் செயலா கின்றது" எனக் கூறுமாற்றான் அவரது வாழ்க்கைமுறை பெறப் படும்.

கபீரடியார் பன்னெடு நாட்கள் வாழ்ந்திருந்தோராவர். அன்னார், தம் பொன்னுடலை நீத்தற்குச் சின்னாண் முன்னர், காசியினின்றும் மகாருக்குச்செல்ல மனங்கொண்டார். 'மகாரில் மாண்டோர் மறுபிறப்பிற் கழுதையாவர்' என்பது அக்காலத்தவர் கொள்கை. அதற்கேற்ப, அவர்தம் மாணவர் பலர் அவரது பயணத்தைத் தடுக்க முயன்றும் பயன் பெற்றிலர். அறியாமை வாய்ப்பட்ட பழங்கொள்கைகள் அனைத்தையுமகற்ற நினைந்த அடியார் மகாருக்கே சென்று, அங்குத் தம் பூதவுடலை நீத்துப் புகழுடம்பைப்பெற்று, இறைவனடியில் இரண்டறக் கலந்தார்.

இந்திய நாட்டில் இதுகாறுந் தோன்றிய சீர்திருத்தப் பெரியார்களில் ஒருவரெனக் கபீரடியாரை இன்றும் கருதுகின்றாம்.



உ

# நன்னூல் மூன்னூற்பா

## பொருள்

பண்டிதர், நாராயணசாமியார், திருவையாறு.

(முற்றொடர்ச்சி 175 பக்கம்.)

முகவுரை—நூற்கு முகம்போன் றுளிருமுரை. பதிகம்—நூலினுட் கூறும் பலவகைப் பொருளையுந் தொகுத்துரைப்பது. அணிந்துரை—நூலினது பெருமை முதலியன விளங்க அழகு படுத்தியுரைப்பது. நான்முகம்—நூலினது முகமாக விளங்குவது. புறவுரை—நூற்புறத்தே திகழுமுரை. தந்துரை—வேறாகக் கொணர்ந்துரைப்பது. புனைந்துரை—வெளிப்படை. பாயிரம்—வரலாறு.

முகவுரை—முகமாகியவுரை. நான்முகம்—நூற்குமுகம் போல முற்பட்டு நிற்பது எனினும் பொருந்தும்.

உரைக்குமெனை ஒரு சொல் இடைப்பெய்து அணிந்துரைக்கு முரையெனக் கூறினு மமையும். தந்துரைபுனைந்துரைகட்கு மங்ஙனமே. அணிந்துரை, தந்துரை, புனைந்துரை—வினையெச்சத் தொடர். ஈண்டு உரைகள் வினைமுதல் விகுதிகளை யிழந்தன. தந்துரை, எவற்றைக் கொணர்ந்துரைப்பதாமெனின் நூலினது வரலாறு முதலியனவற்றை யென்க. புறம்—நூலின் முன்புற மென்க.

நூலின் பின்புறத்தேயும் பாயிரம் நிற்கலாமே; புறம் என்றால் இருபுறமுமடங்காவே, இப்பொழுது வெளிவந்துள சில நூல்களில் பின்புறத்தேயும் பாயிரம் அச்சிடப்பட்டிருக்கின்றதே எனின்

பாயிர முணர்ந்து நூலுணரப் புகின் அஃதினிதியலு மென்பது நெடுமொழியன்றோ; அதனை நீ யறிந்திலைபோலும். பாயிர முணராக்கால் குன்று முட்டிய குரீஇப் போலவும் குரிச்சிப்புக்க மான் போலவும் மாணுக்க னிடர்ப்படுவன் என்பது ஆன்றோர் துணிபாகலான் முன்னுணரத் தக்க பாயிரத்தைப் பின்னிறுத்தல் எத்துணையும் பொருந்துவ தொன்றன்றென்க.

நூல்களை ஒரு எட்டிலிருந்து பெயர்த்து வேறோர் எட்டிற் பொறிப்போர் நூலிலுள்ள ஆவலான் நூலை முன்பெழுதிப் பாயிரத்தைப் பின்னெழுதி வைத்ததுகொண்டு, பாயிரம் பின்புறத்தேயு நிற்கலாமென நூலறிவு சான்ற பெரியார் கொள்ளாரென்க.

அன்றி ஏடு எழுதும் வழக்கம் படித்தவர்க்கே யுண்டெனக் கூறமுடியாது. படியாதவரும் எழுதிவிற்கும் வழக்கத்தைக் கைக் கொண்டுறைந்தன ரென்பது அறியப்படுதலான், அவருணர்ச்சி யின்றி முன்பின்னுகமாறி நிற்குமாறு எழுதியவற்றை நோக்கி வினவல் தகுதியன்றென்க.

அச்சிடுவோர் எட்டிலுள்ளபடியே அச்சிடல் வேண்டு மென்னும் நோன்பைக் கைக்கொண்டுள்ளமையால் அவர்களெழுதி யச்சிட்டமுறையை நோக்கி ஆய்தலொழிக.

இனிப் பாயிரம் நூலின் முன்புறத்தே நிற்றற்குரிய தென்பது, இந்நூலாசிரியர் நூலிலக்கணங் கூறப்புகுந்த ‘நூலி னியல்பே’ என்னுஞ் சூத்திரத்தின்கண் ஒரிருபாயிரந் தோற்றலா மிலக்கணத்தை முற்கூறலானும் விளங்குதல் காண்க.

அன்றி நூற்கு முகம்போலும் பாயிரத்தை நூலிறுதியி னிறுத்தலா யென்றல் எங்ஙனஞ் சாலுமென்க.

சிறப்புப்பாயிரம் தன்னுசிரியர் முதலிய புறத்தாராற் சொல்லப் படுதலானும், பொதுப்பாயிரம் புறத்தாராலும் சொல்லப்படுத லானும், பெரும்பாலும் நூல்கள் வெளிப்படையாகச் சிறப்புப் பாயிரத்தையே பெற்று வருதலானும், சிறப்புப்பாயிர மில்லாது

பொதுப்பாயிரமட்டும் நில்லாதாகலானும் புறத்தாராற் சொல்லப் பட்டவுரை புறவுரை யெனவும் புறத்தாராற் கொணர்ந்துரைக்கப் பட்டவுரை தந்துரை யெனவும் கூறினுமமையும்.

இனித் தந்து என்பதை நூலின் பரியாயமாகக் கொண்டு நூற்கின்றியமையாதவுரை தந்துரை எனவுங் கூறலாம். புறம் அடியாகப் புறவுரையும் தருதலடியாகத் தந்துரையும் பிறந்தமை யான் வேற்றுமையவாயினவென வறிக.

நூல்சொல்லிய பொருளல்லாதவைகளைச் சொல்லுவது புறவுரையெனவும், நூற்குள்ள நுதலிய பொருளல்லாதவைகளை யதற்குத் தந்துரைப்பது தந்துரையெனவும், நூல்சொல்லிய பொருளல்லவையாவன நுவல்வோன்றிறன் முதலியன—நூற் குள்ள நுதலிய பொருளல்லவையாவன மதமுதலியன எனவுங் கூறிற் பொருந்துமன்றேயெனின், புறவுரை தந்துரையென்பவற் றிற்கு அங்ஙனங் கூறியது பொருந்துமேனும் அவற்றை விளக்க வந்தவுரை பொருந்தாதென்க.

நுவல்வோன்றிறன் முதலிய நான்குமே பொதுப்பாயிரம் ஆகுமென்பது இந்நன்னூலாரும் இவரைப் பின்பற்றிய பின்னூ லாரிற் சிலருமொழிய முன்னூலாரும் பின்னூலாரிற் பலரும் கொண்ட கொள்கையாகும். இது வெளிப்படையானதே.

இவர் நூலுணர்தற்கு மத முதலியனவும் இன்றியமையாக் கருவியாக வுணரப்படுதலான் பொதுப்பாயிரம் ஐந்தெனக்கொண் டனர். (இவர் முதனூலாகக்கொண்ட பல நூல்களுள் தொல் காப்பியமொன்றையன்றி அகத்தியமவிநயம் முதலியன காணப் படாமையால் இவர் தாமே படைத்துக் கூறினரென ஒருதலையாகக் கூற வியலாதென்பாருமுளர்.)

பொதுப்பாயிரமட்டுமொரு நூன்முகத்தே நில்லாதென்ப தொருதலை. அங்ஙனமாகப் பொதுப்பாயிர மைந்தனுள் ஒன்றாகிய நூலின்றிறனும் மத முதலியவற்றை யுணர்த்திப் பாயிரந்தனித்து நிற்குமென்றல் எங்ஙனம் பொருந்தும்?

அன்றி மத முதலியவற்றைத் தனித்துணர்த்தி நுவல் வோன்றிறன் முதலியவற்றை யுணர்த்தாது வரும் பொதுப் பாயிரத்தை எங்கேனுங் கண்டதுண்டா? என வருங் கேள்விக் கிறையின்மையானும் பொருந்தாதென்க.

மணிமேகலை சிலப்பதிகாரம் சீவகசிந்தாமணி முதலிய நூல்களில் பதிகமென்னும் பாயிரங் காணப்படுதலானும், அப் பதிகங்கள் நூலினுட்கூறும் பலவகைப் பொருளையுந் தொகுத்துப் பிண்டமாகக் கூறலானும், "பதிகக்கிளவி பல்வகைப் பொருளைத் தொகுதியாகச் சொல்லுத ருனே" என்பவாகலானும் 'ஆக்கி யோன் பெயரே' என்னுஞ் சூத்திரத்துள் நுதலிய பொருளை யுணர்த்தலும் பாயிரமெனக் கொண்டமையானும், அச்சூத்திரம் நன்னூலார் 'முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும் பொன்னேபோற் போற்றுவம்' என்பதற்கிலக்கியமாக எடுத்து மொழிந்த சூத்திரங்களு ளொன்றுமாகலானும், 'தெய்வ வணக்கமுஞ் செயப்படுபொருளு மெய்த வுரைப்பது தற்சிறப் பாகும்' எனத் தற்சிறப்புப் பாயிரத்துள்ளும் நுதலிய பொருளை விலக்காது இன்றியமையாததாகக் கொண்டுள்ளமையானும், நூலினுட் கூறுவனவற்றைப் பிண்டமாக இந்நூற் சிறப்புப்பாயிர முதலியவற்றில் 'அரும்பொருளைந்து' 'மையறு புறப்பொருள்' 'தருகை நீண்ட தசரதன் றன்றரு மிருகைவேழத் திராகவன்றன் கதை' எனக் கூறுவதுபோலப் பொதுமொழி கிளந்த படலம் பலவற்றுட் கூறுவனவற்றை யெல்லாந் தொகுத்து நூன்முகத்திற் கூறின் அவற்றை யுணர்ந்த மாணுக்கன் நூலினுள் விரியை எளிதாக வுணருமாகலானும், 'பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூலினிது விளங்கும்' என்பவாகலானும், இந்நூல் விருத்தியுரை யாசிரியர் 'நூன்முகத் துரைப்பதேயன்றிப் படலமுகத்தும் ஒத்து முகத்தும் சூத்திர முகத்தும் உரைப்பனவும் பாயிரமேயாம். * படல முகத்துரைப் பது இப்படலமென்னுதலிற்றோவெனின் என்பது. ஒத்துமுகத்

---

* படலமுகத்துரைப்பது 'இப்படலமென்னுதலிற்றோ வெனின் இன்னது நுதலிற்று' என்றிருத்தலே பொருந்தும். மற்றையவற்றிற்கு மிங்ஙனமே யறிக.

துரைப்பது இவ்வோத்து என்னுதலிற்றோவெனின் என்பது; சூத்திரமுகத்துரைப்பது இச்சூத்திர மென்னுதலிற்றோ எனி னென்பது' எனப் படலம் ஓத்து சூத்திர முகத்துரைக்கப்படும் பிண்டப் பொருளையும் பாயிரமாமெனக் கூறியிருத்தலானும் நூலினுட்கூறும் பலவகைப் பொருளையுந் தொகுத்துக் கூறுவதே (பிண்டமாகத் தொகுத்துக் கூறுவதே) பதிகமாம் என்றல் சாலப் பொருந்துதல் காண்க.

உரையாளர்கள் பதிக மென்பதற்கு ஐந்து பொதுவும் பதினொரு சிறப்பும் ஆகிய பலவகைப் பொருளையுணர்த்துவது எனப் புகன்றனரே யெனின்,

> பன்னிய நூற்பேர் பகர்ந்தோன்பேர் காரணமும்
> துன்னு பயனளவுஞ் சொல்லினன்—முன்னைச்
> சிறப்பா மவற்றுட் சிலவேறி னாலும்
> பெறப்படுமா முன்னைப் பெயர்.

எனவரும் பாவால் சிறப்புப் பாயிரம் நூற்பெயர், ஆக்கியோன் பெயர், காரணம், பயன், அளவு ஆகிய ஐந்து சிறப்புங்கொண்டு நிற்குமென்பதும், இவற்றுள்ளும் ஒன்றிரண்டு குறைய நிற்குமென் பதும் அறியப்படுகின்றன.

இங்ஙனங் குறையச் சிலபொருளோடு திகழுஞ் சிறப்புப் பாயிரத்தை நோக்க பதினொரு பொருளோடு திகழும் சிறப்புப் பாயிரம் பலவகைப்பொருளைத் தொகுத்துக் கூறும் பதிகமாம் எனப்படுமாதலானும், ஐந்து பொதுவையும் பதினொரு சிறப் பையுந் தொகுத்துக் கூறுவது பதிகமென்னும் பெயரோடு வரக் காணாமையானும், நிகழ்ச்சியில் நூலினுட் கூறும் பலவகைப் பொருளையுந் தொகுத்துக் கூறும் பாயிரமே பதிகமென்னும் பெயர்பெற்று வரக் காணுதலானும் அவ்வர் கூற்றுச் சிறந்ததெனக் கொள்ளவியலாதென்க.

பெயர்கூறலு மிலக்கணங் கூறலோடொக்கு மாகலின், சாத்தன் எனப்படுவான் தேவன் என்றாற்போல முகவுரை பதிகம் அணிந்துரை நான்முகம், புறவுரை தந்துரை புனைந்துரை யெனப்படுவது பாயிரமென்றாரென்க. எனினும் பாயிரம் இப்பெயர்களையுடைய தென்பது கருத்தாகக்கொள்க.

# கும்பகோணம் நாகேச்சுரரது திருக்கோயிலுள்ள சில கல்வெட்டுகள்.

திருவாளர், T. V. சதாசிவப் பண்டாரத்தாரவர்கள்,
தமிழ்ப்பண்டிதர், கும்பகோணம்.

கும்பகோணம் என்பது முற்காலத்தில் திருக்குடமூக்கு என்றும் திருக்குடந்தை என்றும் வழங்கப்பெற்றுவந்தது என்பது பழைய தமிழ் நூற்களையும் கல்வெட்டுகளையும் செப்பேடுகளையும் ஆராய்வார்க்கு இனிது புலனும். இந்நகரில் பல திருக்கோயில்கள் உள்ளன. அவற்றுள், கும்பேச்சுரர் திருக்கோயில், நாகேச்சுரர் திருக்கோயில், காசி விசுவநாதர் திருக்கோயில் ஆகிய மூன்றுமே சைவசமய குரவர்களால் பாடப்பெற்றனவாகும். ஆகவே, இக்கோயில்களும் இவற்றைத் தன்னகத்துக்கொண்டுள்ள இந் நகரமும் கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னரே நிலைபேறுடை யனவா யிருத்தல்வேண்டும். இம்மூன்று திருக்கோயில்களுள் நாகேச்சுரர் திருக்கோயில் குடந்தைக் கீழ்க்கோட்டம் எனவும் காசிவிசுவநாதர் திருக்கோயில் குடந்தைக் காரோணம் எனவும் தேவாரப் பதிகங்களில் குறிக்கப்பெற்றுள்ளன. கும்பேச்சுரர் திருக்கோயில் தஞ்சையையாண்ட நாயக்கமன்னரிடம் அமைச்ச ராக விளங்கிய கோவிந்த தீட்சதரால் கற்றளியாக அமைக்கப் பெற்றதாகலின் பழைய கல்வெட்டுகள் அங்குக் காணப்படவில்லை; இவ்வமைச்சர் காலத்திய ஒரு கல்வெட்டுமாத்திரம் அங்கு உளது. காசி விசுவநாதர் திருக்கோயிலிலும் கல்வெட்டுகள் இல்லை. எனவே, குடந்தைக் கீழ்க்கோட்டம் எனப்படும் நாகேச்சுரர் திருக் கோயிலில் மாத்திரம் பழமைவாய்ந்த பல கல்வெட்டுகள் உள்ளன. அவையனைத்தும் வாலாற்று ஆராய்ச்சியாளர்க்குப் பெரிதும் பயன் படத் தக்கனவாகும். அவற்றுள் சிலவற்றைக் கீழே காண்க.

I

(1) ஸ்வஸ்திஸ்ரீ சீர்மன்னி யிருநான்கு திசை விளங்க திருமடந்தையும் போர்மன்னு சயமடந்தையும் மண்மடந்தையும் முறையினெறிவாழ அருந்தமிழோர் கிளைவாழ........(2) மனுநெறி வாழப் பொன்மகுடங் கவித்தருளி வெங்கோபக் கருங்கலிப் பகைவிட நாகர் பிலம்படாச் செங்கோலுங் கொம.......ந்த கிரிவரை வரம்பளக்க எண்டி........முகத்தெண்......க்கு (3) இத் தனிக்கூடமென்ன அண்ட கூடமுமளந்த முழுமதிக்குடை நின்றழ கெரிப்பப் பொலந்திகிரி பதினாறு புவனங்களு மடிப்படுத்த...... மேருகிரி பொருந்த வயப்புலி......ெ......ற...... (4) ன் வீர சிம்மாசனத்துப் புவனமுழுதுடையாரொடும் வீற்றிருந்தருளிய கோப்பரகேசரிபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீஇ...... தேவற்கு யாண்டு இருபதாவது மீனநாயற்று பூர்வபக்ஷத்து...... (5) கிழமையும் பெற்ற சித்திரைநாள் உய்யக்கொண்டார் வள நாட்டுப் பாம்பூர் நாட்டுப் பிரம்மதேயம் திருக்குடமூக்கில் உடையார் திருக்கீழ்க்கோட்டமுடையார் தெற்கில் திருமடை விளாகத்தும......கியக்கா...... (6) டத்துக் கும்பிட்டு இருக்கும் கூத்தாடு திருஞானசம்பந்தர் மடந்தை பாகனேன் நாயனார் மடந்தை பாகதேவர் திரு......ல எழு......புகுந்து திரு ஓலக்கஞ் செய்து.........ராணங் கொண்டருளாநிற்க (7) இந்நாயனார்க்குத் திருப்பணிக்கும் திருவாபரணங்களுக்கும் உடலாக என்காணியான நிலமாய் ஸ்ரீபாதத்து நீர் வார்த்துக் கொடுத்த நிலமாவது இவ்வூர் பிடாகை அராவமுது நல்லூரில் ந......க்கறை (8) பத்து இவ்வூர் ப்ராமணர் பலர் பக்கலிலும் விலைகொண்டும் ஆனைங்கூருடையான் புற்றிடங்கொண்டான் பக்கல் விசத்தி......ட்ட பரிவர்த்தனையாக உடையார் திருச்சிற்றம்பலமுடையார் (9) தேவதானம் ராஜாதி ராஜ வளநாட்டு வெண்ணெயூர் நாட்டு மேலை வல்லந்து என் காணியான நிலம் நாலே ஆறுமாவும் கொடுத்து நான் பரிவர்த் தனையாலும் என்னதாய் நான் அனுபவித்துவருகிற (10) ராய் திருநாமத்துக் காணியாகக் கொடுத்த விளைநிலமும் புன்செய்யும் புன்செய்த்திருத்தும் அகையா......ம் மாவது இவ்வூர் பிடாகை

அராவமுது நல்லூரில் காமக்காணி மகாதேவன் வடுகன் உள்ளிட்டார் நிலத்துக்...... (11) கு மேற்கினும் ஆராவமுது வாய்க்காலுக்கு வடக்கினும் உடையார் திருக்கீழ்க்கோட்டமுடையார் திருமஞ்சனப் பெருவழிக்கு கிழக்கினும் முதலியார் மாணிக்க வாசகர் காணியான நிலத்துக்கு தெற்கும் ஆக (12) இசைந்த இந்நான்கு எல்லையுள் நடுவுபட்ட நிலமும் இன்னமும் இக் கட்டளையில் குடுத்த ஆத்திரையன் மாயான் சடாமகுடபட்டன் ப்ராமணி நிலத்துக்கும் அபிமான பூஷண விநாயகப் பிள்ளையார் நிலத்துக்கும் மேற்கு (13) கௌணியன் மகாதேவன் சிபலதேவ பட்டன் நிலத்துக்கு வடக்கினும் இந்நாயனர் திருமஞ்சனப் பெருவழிக்கு கிழக்கினும் குலோத்துங்கசோழன் குலைக்கு தெற்கினும் ஆக நடுவுபட்ட நிலமும் ஆக இ........ (14) ல் வந்த விளை நிலம் புன்செய்யும் புன்செய்த்திருத்தும் அகையாறு மிகுதிக் குறைவுள்படக் குடுத்த நிலம் கஇ- இந்நிலம் ஒன்றரையே அரைமாவும் இந்நிலங்களில் மேனோக்கின தெங்கு உள்ளிட்ட மா (15) ங்களும் கீழ்நோக்கின கிணறுகளும் புகவும் பொரவும் நீர் பாயுவும் வராவும் மற்றும் எப்பேர்ப்பட்ட உரிமைகளும் உள்ளபடி நான் கொடுத்தபடியே திருநாமத்துக் காணி ஆகவும் இந்நிலத்து இறுப்பு விளை நிலத்துக்கு (16) புன்செய்க்கும் நான் இறுத்துவந்தபடியே ஊரார் இந்த கடமை இறுத்து இறை மிகுதியால் உள்ள உடல்கொண்டு திருப்பூசைகளும் திருவாபரணங்களும் இந்நாயனுற்கு செய்ய வெண்வன்செய் (17) யக்கடவேனுகவும். பின்பும் என் சந்தானத்தில் உள்ளார் இவ் வுடல்கொண்டு இப்படி செய்யக் கடவதாகவும். இவ்வூர் ஜென நாயக்கன் திருவனத்தில் எழுந்தருளியிருக்கும் உடையார் (18) திருக்குடமூக்குடையாற்கு கொடுத்த நிலமாவது இக்கட்டளையில் குடுத்த அகையாறு நிலம் நான்மாவரையும் இந்நாயனுற்கு திருப்பணிக்கு உடலாகவும் இப்படி சம்மதித்து இந்நாயன்மாற்கு திருநாம—(19) மதத்துக் காணியாக கொடுத்தேன் கூத்தாடுந் திருஞான சம்பந்தர் மடந்தை பாகனேன். இப்படிக்கு இவை கூத்தாடுந் திருஞானசம்பந்தர் மடந்தை பாகனேன் எழுத்து... அருளிச்செய்ய இப்பி (20) ரமான இசைந்திட்டு எழுதினேன்

சயங்கொண்ட சோழ வளநாட்டு திருவழுந்தூர் நாட்டு காஞ்சி வாயிலுடையான் மடந்தைபாகன் தில்லைவாணன் எழுத்து. ஸ்வஸ்திஸ்ரீ இற்றை நாளால் (21) கூத்தாடுந் திருஞானசம்பந்தர் மாணிக்க வாசகனேன் உடையார் திருக்கீழ்க் கோட்டமுடையார் கோயிலில் நான் எழுந்தருளுவித்த கூத்தாடுந் திருஞான சம்பந்தீசுவர முடையார்க்கு அமுதுபடிக்குக் கொடுத்த இக் பட்டவோயி (22) ல் நாயனர் மடந்தை பாகதேவர் திருநாமத்துக் காணியான் நிலத்துக்கு மேற்கும் வடக்கும் இந்நாயனர் திரு மஞ்சனப் பெருவழிக்குக் கிழக்கு......ங்க...க்கடு...தன் கூத் தாடுந் திருஞானசம்பந்தர் மாணிக்கவாசக (23) னேன் இப்படி அருளிச்செய்ய இப்படி பிரமாண இசைந்திட்டு எழுதினேன் காஞ்சிவாயிலுடையான் மடந்தை பாகன் தில்லைவாணனேன் எழுத்து இப்படிக்கு இவை கூத்தாடுந் திருஞானசம்பந்தர் மாணிக்க வாசகனேன்.

II

(1) ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் மதுரையும் ஈழமும் கருவூரும் பாண்டியனை முடித்தலையும் கொண்டருளி விஜயாபிஷேகமும் வீரா (2) பிஷேகமும் பண்ணியருளின ஸ்ரீ திரிபுவன வீரதேவர்க்கு யாண்டு முப்பத்தஞ்சாவது உய்யக் கொண்டார் வளநாட்டுப் பாம்பூர் நாட்டுத் திருக்குடமூக்கில் உடையா (3) ர் திருக்கீழ்க்கோட்டமுடையார் கோயில் முதல் பிரகாரத்துக் கீழைத்திருமாளிகையில் வேளூர்க்கிழவன் ஆழ்வான் திருப்புறம்பியமுடையானான செம்பியன் பல்லவரைய (4) ன் எழுந் தருளுவித்த உடையார் திருப்புறம்பிய முடையார்க்கு அமுது படிக்கு நாளொன்றுக்கு........தா........க்க........க்குத்தலரிசி நானு ழியும் இவ்வரிசியால் வந்த (5) பருப்பமுதும் கறியமுதும் உப்பமுதும் மிளகமுதும் தயிரமுதும் நெய்யமுதும் அடைக்கா யமுது பாக்கும் இலை அமுது பற்றும் திருமஞ்ச (6) னமும் திருப் பள்ளித்தாமமும் திருமேற்பூச்சும் உள்ளிட்ட விஞ்சத்துக்கும் சிறு காலைச் சந்தி விளக்கு இரண்டும் உச்சிச் சந்தி விள்க்கு ஒன்று (7) ம் இரவைச் சந்தி விளக்கு நாலும் ஆக இச் சந்தி விளக்கு

எழுக்கும் வேண்டும் திருவிளக்கு எண்ணையும் இந்நாயனுர் ஸ்ரீ பண்டாரத்து உட (8) விலெ இத்திருப்புறம்பிய முடையார்க் குப் பூசைக்கும் அமுதுபடிக்கும் விடக்கடவதாகவும். இப்படி விடுமிடத்து முப்பத்தஞ்சா (9) வது சித்திரை மாசமுதல் நிபந்தக் கட்டாக விடக்கடவதாகவும். பூசிக்கும் நம்பிமார் சிவப்பிரா மணர்க்கும் தானமைப்பாருக்கும் வே (10) ண்டும் நிபந்தத்துக்கு இக்கோயிலில் உடலிலே விட்டு இத்திருப்புறம்பிய முடையார் அமுது செய்தருளின சோறு நாஞழியும் (11) சொற்றடைப்பிலெ கூட்டிக்கொள்ளக் கடவதாகவும் இப்படியால் வந்த நிபந்தக்கட்டுப் படியே சந்திராதித்தவல்விட (12) க் கடவதாகவும். இதற்கு உபயமாக உடையார் திருக்கீழ்க் கோட்டமுடையார்க்குத் திரு மகரதோரணம் பண்ணிச் சாத்துகை (13) க்கு உபயமாக வேளூர்க்கிழவன் ஆழ்வான் திருப்புறம்பிய முடையானை செம்பியன் பல்லவரையன் முப்பத்தஞ்சாவது நாள் உள (14) சமஎ ஞல் சி பண்டாரத்து ஒடுக்கின காசு மஎகூ காசு பதினே ழாயிரமும் சி பண்டாரத்து ஒடுக்கினமைக்கு இவை கோயிற் கணக்கு இராமநாருடையான் மூலபுருஷப்பிரியனேன் எழுத்து. (15) இக்காசு பதினேழாயிரமும் சி பண்டாரத்து ஒடுக்கினமைக் குத் தேவகன்மி உய்யக்கொண்டான் பட்டன் னெழுத்து. இக் காசு பதினேழாயிரமும் கோயில் ஒடு:—

## III

(1) ஸ்வஸ்தி ஸ்ரீ பாண்டியன் தலை கொண்ட (2) கோப்பர கேசரி வன்மற்கு யாண்டு ந ஆ (3) வது வடகரைப்பாம்பூர் நாட்டுத் தேவதான (4) ம் திருக்கீழ்க்கோட்டம் ஸ்ரீ குடந்தை பி பெ (5) ருமக்களாம் இங்கணுட்டுச் சிற்றிங் (6) கனுடையான் கோயில் மயிலையானப (7) ராந்தக மூவேந்த வேளாற்கு (8) மேற்காவிரி (நா) ங்கள் உடையாரிடை அபிஷேக தக்ஷிணை (9) பெற்றுடைய நிலம் உமச வேலியினுல் (10) திருக்கீழ்க்கோட்டத் தப் பெருமான் ஸ்ரீ கோயிலிலே (11) வேதம் வல்லார் அபூர்விகள் உம சிவயோகிகள் (12) ஐவரும் சந்திராதித்தவல் உண்ண ஸ்ரீ சாலா போக (13) மாக வைக்க விற்றுக் கொடுத்த நிலம் கூஇ.

இவ்வாறரைமா (14) நிலத்துக்கும் எல்லை கீழ்பாற்கெல்லை வேளார் குறி மே (15) லெல்லை வரம்புக்கு மேற்கும் மேற்காவிரி நிலத் நிலத்துக்கு மே (16) ற்குத் தென்பாற்கெல்லை விற்றெ....தகத்துக் கும் கு (17) த்துக்கு மாக வடக்கும் மேற்காவிரி நிலத்துக்குமாக வடக்கும் (18) மேற்பாற்கெல்லை விற்றெங்கள் நிலத்துக்கு கிழக்கும் (19) வடபாற்கெல்லை விற்றெங்கணிலத்துக்கு தெற்கும் இவ் (20) விசச்ச பெருநான்கெல்லையு ளகப்பட்ட நிலம் ௬ (21) இவ்வாறை யும் நான்முலபறடைப் பெருமக்க (22) ளிடைய விலை கொண் டுடைய பரிசெ சாலாபோக (23) மாக வைச்செசன். கோயில் மயிலையாநபராந்தக (24) மூவேந்த வேளானேன். இது ஆயிர திருவடியும் (25) நாகெஸ்வாமுடைய ரக்ஷை.

---

# பரணர்.

---

திரு. வித்வான். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்,
ஆசிரியர், போர்டு உயர்தரக் கலாசாலை, காவிரிப்பாக்கம்.

---

(முற்றொடர்ச்சி 234-வது பக்கம்.)

---

இனி, இப் பழையன் மோகூரைப் பற்றிய வரலாற்றிற் போந்த மோரியர் என்பார் பாடலிபுரத்து மோரிய வரசாது குடிக் குரியோர் என்றும், அவர்கள் முதலாங் கீர்த்திவர்மன் என்னும் சாளுக்கிய வேந்தனது பகைவர்கள் என்றும் "பம்பாய் கெசட்டீர்" என்னும் வரலாற்று நூல் கூறுகின்றது. ஆசிரியர் மாமூலனர், மோரியர் வடநாட்டு வாழ்நராவர்; இவர்கட்கு முன் தென்றிசை நோக்கி வடுகர் வந்து தம் வன்மையால் வளம் பெறக் கண்டு, இம் மோரியர் தென்திசையிலும் தம் வென்றிச்

சீர் விளங்குதல் வேண்டும் என்று கருதி வந்தனர் என்றும், அது போது அவர் மலையைக் குறைத்துத் தம் தேர்களுக்கு வழிசெய்து கொண்டனர் என்றும் கூறுகின்றார். அது

"முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு
விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத்து
ஒண்கதிர்த் திகிரி உருளிய குறைத்த
அறையிறந் தவரோ சென்றனர்" (அகம். 281)

என்பது.

இனி, ஆசிரியர் பாணரால் பாடப்பெறுந் தகுதிபெற்ற அரசர் பெருமக்களுள் ஒருவனை கரிகாலன் வரலாற்றினைச் சிறிது காண்பாம்.

## கரிகாலன்.

பாணர் என்னும் புலவர் பெருமகனால் தம் பாடலின்கண் உலகம் பொன்றுங்காறும் பொன்றாப் புகழ் தரப்பெற்ற தமிழ் நாட்டு முடியுடை வேந்தர்களுட் கரிகாற் சோழன் வரலாறு ஈண்டு ஆராயப்பெறுகின்றது. இவனது வரலாறு பல அறிஞர்களால் சிரிய முறையில் ஆராய்ந் தெழுதப்பட்டிருத்தலின், அதனை முற்றிலும் ஈண்டுக் கூறின் இக் கட்டுரை மிகப் பெருகுமென் றஞ்சிச் சிறிதே கூறுகின்றோம்.

சோழநாட்டை யாண்ட அரசர்களுட் டலைமையாகக் கூறப் படுபவன் இக் கரிகாலனே. இவன் காலத்துத்தான் சோழனாடு மிகச்சிறந்த புகழ் பெறுவதாயிற்று. "சோழ வளநாடு சோறு டைத்து" என ஒளவையார் கூறுதற்கு ஏதுவான நெல்வளம் இவன் ஆட்சியிற்றான் மேம்பட்டது. இதுபற்றித்தான்,

"எரியும் எற்றத்தி னாலும் பிறர்நாட்டு
வாரி சுரக்கும் வளனெல்லாம்—தேரின்
அரிகாலின் கீழுகூஉம் அந்நெல்லே சாலும்
கரிகாலன் காவிரிசூழ் நாடு" என்று சான்றோர்

புகழ்வாராயினர். சுருங்கக் கூறின், ஒரு நாடு சீரிய புகழ் பெறுதற்கு வேண்டுவன யாவையோ அவை முற்றவும் ஆக்கி அமைத்த அறிவு, ஆண்மை, பொருள், படையாகிய ஆற்றல் படைத்த அரசரேறு இக் கரிகாலன் என்பது பொருத்தமாகும்.

கரிகாலன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி யென்பானது அருமைத் திருமகன். இவன் தன் இளமைப் பருவத்தே தந்தையை யிழந்து தன் அம்மான் இரும்பிடர்த்தலையார் என்பாரைத் துணையாகக் கொண்டு கருவூரில் இருந்து வந்தான். அக்காலத்துச் சோழநாடு அரசிழந்து அலமந்து வருந்தக் கழுமலத்தி லிருந்த சான்றோர் அரசுவா ஒன்றை அணிசெய்து மாலை யளித்தனுப்ப, அவ்யானை கருவூரிலிருந்த கரிகாலனைக் கொணர்தர, அச்சான்றோர் ஒன்று கூடி யவனை யரசனாக்கினர். அக்காலை அவன் மிக்க இளையனா யிருந்தது கண்ட புறமன்னர் பலர் கூடி யெதிர்த்து அந்நாட்டைக் கைக்கொண்டு கரிகாலனையும் சிறைப்படுத்தினர். இவன் அச் சிறையினின்றுந் தப்பி வெளிப் போந்து, தனக்குவேண்டும் படைத்துணை கொண்டு அப்பகை மன்னரை வென்று தன் நாட்டினைத் திரும்பப் பெற்று அரசு புரிந்தனன்; மேலும், இவன் இளமைக் காலத்தே தன் மதி நுட்பத்தால், சான்றோர் வியப்பெய்த, வேற்றுருவங் கொண்டு, வழக்கொன்று கொண்டு போந்த முதியோர்கள் உள்ளம் உவப்ப, அதனைத் தீர்த்து முடிபுசெய்தான்; நாங்கூர் வேளிடை மகட் கொண்டு, இவன், பத்தினிக் கடவுளெனப் பரவிப் புகழ்பெறும் கண்ணகியால், "உரைசான்ற மன்னன் கரிகால் வளவன் மகள்" எனப் புகழப்பெற்ற ஆதிமந்தியார் என்னும் கடவுட்கற்பும் கல்விப்புலமையும் மிக்க பெண்மகளைப் பெற்றான்; உறையூரினின்றும் காவிரிப்பூம் பட்டினம் போந்து, அதனைத் தன் தலை நகராகக்கொண்டு, செல்வங் கொழுத்த திருநகராக்கினன்; வெண்ணி, வாகை முதலிய விடங்களிற் றன்னை யெதிர்த்த வேந்தர் வேளிர்களை வென்று சிறப்பெய்தினான்; வடநாடு சென்று, மேற்செல்லாவாறு, இமயம் தடுப்பச் சினந்து அதன் சென்னியிற் புலிக்கொடி பொறித்துத் திரும்பினன்; தன்

நாட்டின்கண் காடு கொன்று நாடாக்கிக் குளந் தொட்டு வளம் பெருக்கிக் குடிபெருகக் கோலோச்சி வந்தனன். வாணிபம் கைத் தொழில் முதலியன ஒருபுடை விளங்க, கல்வி நலம் மேன்மேலும் வளர்ந்தது. சான்றோர் பலர் தழைத் தோங்கினர். முடத் தாமக் கண்ணியார், கடியலூர் உருத்திரங் கண்ணனார் முதலிய நல்லிசைப் புலவர் பலர் கரிகாலன் மீது நறுந்தமிழ்ப் பாட்டுக்கள் பாடுவாராக, அவர்கள் வரிசை யறிந்து இவனும் தகுவன செய்து அவர் புலமைநலம் வளம்பெறச் செய்தனன்.

இனி, இவன் பிறக்குங் காலத்துத் "தாய் வயிற்றிருந்து தாயம் எய்திப்" பிறந்தானென ஆசிரியர் முடத்தாமக்கண்ணி யார் கூறுகின்றார். அதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் "தாயு டைய வயிற்றிலே யிருந்து அரசுரிமையைப் பெற்றுப் பிறந்து எ-று. தான் பிறக்கின்ற காலத்துப் பிறவாதே நல்ல முகூர்த்தம் வருமளவும் தாயுடைய வயிற்றிலே யிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப் பெற்றுப் பிறந்து என்றார்" என்று உரை வகுத்துள்ளார்.

இதனை யாராயுமிடத்துப் புனைந்துரை யெனக் காணப்படு கிறதேயன்றி உண்மையாகக் கோடற்கு இடமின்று. எனெனின், பிரசூத வாயுவானது, கருவுயிர்க்கு மாதர், நிற்கினும், இருக் கினும், கிடக்கினும், வேறு எந்நிலை மேவினும் மகவை வெளிப் படுத்தும் தன்மையது என்பதும்; அதனைத் தடுத்திடின் தாய்க்கும் குழந்தைக்கும் இறுதி பயக்கும் என்பதும் மருத்துவ நூல் (Midwifery) வல்லார் கண்டறிந்தன வாகலால் பிறக்கின்ற காலத்திற் குழந்தையைப் பெறாமல் வேண்டுமளவும் தாங்கி வைத்துப் பெறுவது எவர்க்கும் முடியாத காரியமேயாம். ஆனால் தாய்க்குப் பிரசூத வேதனை தொடங்கிய போது, அயலிற் சூழ்ந்துள்ளார், "இன்ன நல்லோரையில் இக் குழந்தை பிறக்கு மெனின் நன்று" எனப் பகர்வது பெருவழக்கு. சிற்சில வமையத்து இவர்கள் கருதிய நேரமும் குழந்தை பிறக்குங் காலமும் "காகதாலிய நியாயம் போல்" தம்மில் வந்து இயை வதும் உண்டு. அங்ஙனம் நேர்ந்த இதனை இங்ஙனம் புனைந் துரைத்தனர் போலும்.

"இக் கரிகாலன் நெடுநாளைக்குப் பின்னரேயே தன் அரசுரிமையை எய்தப்பெற்றனன் என்பது விளங்கிக் கிடத்தலால், "தாய் வயிற்றிருந்து தாயம் எய்திப் பிறந்து" என்பதற்குத் "தொழு தெழுவார்" என்றதை "எழுந்து தொழுவார்" எனப் பொருள்கொண் டாங்குத் "தாய் வயிற்றிருந்து பிறந்து பின்னர்த் தாயம் எய்தி" எனப் பொருள் கோடல் நேரிதாகக் காண்கின்றது." *

நிற்க, "கோச் செங்கட் சோழர் இங்ஙனம் பிறந்தனரென்பது திருத்தோண்டர் புராணத்தால் அறியலாவது. சேவ்வந்திப் புராணம் பராந்தகன் மகனாகிய (ஒரு) கரிகாலனுக்கு இச் செய்தியை உரிமையாக்குகின்றது. இவ்வாறுய கதைகளில் ஒன்றை யுட்கொண்டே நச்சினார்க்கினியரும் இங்ஙனம் பொருள் கூறினா ராவர். ஆனால் தாய்வயிற்றி லிருந்து பிறக்கு முன்னரே தந்தை விண்ணுல கெய்தின னாகலின் அப்பொழுதே அரசுரிமை யெய்திப் பிறந்தனன் என்று கூறுவது ஏற்புடைத்தாகத் தோன்றுகிறது." †

இவன் கருவூரிலிருந்து அரசுவாவாற் கொணரப்பெற்று அரசுரிமை யெய்திய செய்தி,

‡ "கழுமலத் தியாத்த களிறுங் கருவூர்
விழுமியோன் மேற்சென் றதனால்—விழுமிய
வேண்டினும் வேண்டா விடினும் உறப்பால
தீண்டா விடுத லரிது."

என்னும் பழமொழி வெண்பாவும், "கழுமலம் என்னும் ஊரின் கண்ணே பிணித்து நின்ற களிறும், கருவூரின்கண்ணே யிருந்த கரிகால் வளவன் கடிது இளையனாயினும் அவன் சிறப்புடையனாதலால் அவன்மேற் சென்று தன்மிசை யெடுத்துக் கொண்டு அரசிற் குரிமை செய்தது" எனவரும் அதன் உரைப்பகுதியும்

* சோழன் கரிகாற் பெருவளத்தான். p. 21. குறிப்பு.

† The Cholas part I. p. 37.

‡ பழமொழி நானூறு. செய். 62. பழையவுரை.

கூறுகின்றன. இவன் வேற்றுருக்கொண்டு வழக்கு முடிபு காட்டியது பொருநராற்றுப்படையில்

"முதியோர்,
அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்" என

வரும் அடியின் உரையாலும்,

|| "உரைமுடிவு காணான் இளமையோ னென்ற
நரைமுது மக்க ளுவப்ப—நரைமுடித்துச்
சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமற் பாகம் படும்"

என்னும் பழமொழி வெண்பாவோடு, "தம்முள் மறுதலை யாயினு ரிருவர் தமக்கு முறைமை செய வேண்டி வந்து சில சொன்னால் அச் சொன் முடிவு கண்டே ஆராய்ந்து முறைசெய்ய அறிவு நிரம்பாத இளமைப் பருவத்தா னென்றிகழ்ந்த நரைமுதுமக்க ளுவக்கும்வகை நரைமுடித்து வந்து முறை வேண்டிவந்த இரு திறத்தாரும் சொல்லிய சொற்கொண்டே ஆராய்ந்தறிந்து முறை செய்தான் கரிகாற் பெருவளத்தா னென்னும் சோழன்" என வரும் அதன் உரைப் பகுதியாலும், "இளமை நாணி முதுமை யெய்தி உரைமுடிவு காட்டிய உரவோன் மருக" எனவரும் மணிமேகலை யடிகளாலும் தெரிகிறது. "வெண்ணிற் றாக்கிய, கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" எனவரும் பொரு நாற்றுப்படையி னடிகளுரையில் இவன் கால் நெருப்பாற் சுடப்பட்டமையால் கரிகாலன் என்னும் பெயரின னாயினன் என்பது தெரிகிறது. இது,

§ "சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்
பிடர்த்தலைப் பேரானைப் பெற்றுக்—கடைக்கால்
செயிரறு செங்கோல் செலீஇயினான் இல்லை
உயிருடையா ரெய்தா வினை." என்னும் பழமொழி

வெண்பாவாலும் அறியப்படுகின்றது. மேலும், இதன்கண் கரிகாலன் அம்மான் இரும்பிடர்த் தலையாரைத் துணைக்கொண் டமையும் தோன்றுதல் காண்க.

---

|| பழமொழி. 21. § பழமொழி. 105.

இனி, இவன் இளமைக் காலத்து அரசுரிமை பெற்ற ஞான்று பகைமன்னரால் சிறைப்படுத்தப் பெற்ற செய்தியும், பின்னர் இவன் அச் சிறையினின்றும் வெளிப்போந்த செய்தியும் ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் உவமை நலம் பொலிய, பட்டினப்பாலை யென்னும் செழுந்தமிழ்ப் பாட்டினுள்,

"கூருகிர்க்
கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்குப்
பிறர், பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி
அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு
நுண்ணிதின் உணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்(து)
உருகெழு தாயம் ஊழின் எய்திப்
பெற்றவை மகிழ்தல் செய்யான்." என்று கூறுவதனால்

அறியப்படுகின்றன. இதன்கண், இவன் சிறைக்கண்ணே ஆற்றல் சிறந்தான் என்பது "குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு" என்னும் உவமையால் விளங்குதல் காண்க.

மேலும், இப் பாட்டின் பகுதியின்கண் இவன் சிறைக்களத்தினின்றும் வெளிப்போந்த செய்திக்குத் தரப்பெற்றுள்ள, பிணியகத் திருந்து, குழிகொன்று, வெளிப்போந்த பெருங்கை யானை பிடிபுக்காங்கு என்னும் உவமை இவன் தன் மனைவியையும் உரிமை மகளிரையும் அடைந்து கூடினன் என்று தெரிவிக்கின்றது. இவன் நாங்கூர்வேளிடை மகள் கொண்டனன் என்னும் செய்தி "மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப" என்னும் தொல்காப்பிய அகத்திணையியற் சூத்திர வுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியரால் கூறப்படுகின்றது. இச் சூத்திரத்திற் பின்னோராவார் வேளாளராவர். "அவர், உழுதுண்போர், உழுவித்துண்போர் என இருவகையின ராவர். "அவருள், உழுவித்துண்போர் மண்டிலமாக்களும் தண்டத்தலைவருமாய்ச் சோழனாட்டுப் பிடவூரும், அழுந்தூரும், நாங்கூரும், நாவூரும் ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமும், கிழாரும் முதலிய

பதியிற் றேன்றி வேளெனவும் அரசெனவும் உரிமை யெய்தி ஞேரும், பாண்டியனுட்டுக் காவிதிப் பட்ட மெய்திஞேரும் குறுமுடிக் குடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்கு மகட்கொடைக் குரிய வேளாள ராகுப......உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி அழுந்தூர்வேளிடை மகட் கோட லோனும் அவன் மகனுகிய கரிகாற் பெருவளத்தான் நாங்கூர்வே ளிடை மகட்கோடலுங் கூறுவார்" என்பது இச் சூத்திரத்து உரைப்பகுதி.

இக் கூறிய செய்திகளுள் கரிகாலன் கால்நெருப்புற்றதும், கழுமலத்து யாத்த களிறு கொணர்ந்து அரசுரிமை யெய்துவித்த தும் ஆராய்ச்சிக்குட் படலாகாத செய்திகளாமென அத்துறையில் வல்லுநர் கூறுகின்றனர்.* நிற்க.

கரிகாலனது போர்ச்செயல்களுள் முதற்கண் நிகழ்ந்தது வெண்ணிப் பறந்தலைப்போர். அதுபோது இவனோடு எதிர்த்துப் பொருதவர் பதினொரு வேளிரும் வேந்தர் பலரு மாவர். இது,

"காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயிற்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழிசை முரசம் பொருகளத் தொழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யறுத்த ஞான்றைத்
தொய்யா வழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே" என

இக் கட்டுரைத் தலைவர் ஆசிரியர் பரணர் கூறுவதனுலறிதலாம். இவ் வெண்ணிப்போர் ஆசிரியர் முடத்தாமக்கண்ணியாரால் பொருநராற்றுப்படையுள்,

"இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இருபெரு வேந்தரும் ஒருகளத் தவிய

* His. of the Tamils p. 369-70.

வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்ருட்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்'' எனவும்,

"நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக!
களியியல் யானைக் கரிகால் வளவ!
சென்றமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற
வென்ருேய்! நின்னினும் நல்லன் அன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே'' என

வெண்ணிக் குயத்தியார் என்னும் புலவர் பெருமாட்டியின் அரிய பாட்டினுலும் கூறப்பெறுவது காண்க.

இக்காட்டிய பாட்டுக்களால் கரிகாலனுடைய போர்களில் இப்போரே சிறந்ததெனச் சான்ருேரால் கருதப்பட்டிருத்தலை அறிதல் வேண்டும். இவற்ருல், இப் பறந்தலையின்கண் பொருதவர், முடிவில், பதினெரு வேளிரும் சோபாண்டியர்களாகிய இரு பெரு வேந்தரும் அவர்க்குத் துணைப்போந்த குறுநில மன்னருமாவர் என்பது பெறப்படுகின்றது. இம் மன்னர்கள் தோல்வியுற்ருேடியபோழ்து ஒரு வேந்தன் தான் பெற்ற புறப்புண்ணிற்கு வருந்தி வடக்கிருந்து உயிர் நீத்தா னென்பது வெண்ணிக் குயத்தியார் பாடலாற் றெரிகின்றது. ஆனல், "மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப" என்னும் கழாத்தலையார் பாடிய புறப்பாட்டு, "சேரமான் பெருஞ்சேரலாதன் சோழன் கரிகாற் பெருவளத்தானேடு பொருது புறப்புண்ணுணி வடக்கிருந்தானைப்" பாடியதாகக் கூறப்பட் டிருத்தலின், கரிகாலனேடு போர் செய்த சேரன் சேரமான் பெருஞ்சேரலாதன் என்பது வெளிப்படுகின்றது. இது மாமூலனுரால் அகநானூற்றில்

"ஒண்படைக்
கரிகால் வளவனெடு வெண்ணிப் பறந்தலைப்
பொருதுபுண் நாணிய சேர லாதன்

அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென
இன்னா வின்னுரை கேட்ட சான்றோர்
அரும்பெற லுலகத் தவனொடு செலீஇயர்
பெரும்பிறி தாகி யாங்கு'' எனப் புகலப் பெற்றிருக்கின்றது. அச் சேரலாதன் வடக்கிருந்து உயிர்துறப்ப, அவன் பிரிவாற்றாத சான்றோர் சிலர் தாமும் உயிர் நீத்தனர் என்பதும் அறியவேண்டுவ தொன்று.

இங்ஙனம் வெண்ணிப்பறந்தலையின்கண் கரிகாலன் வென்றி கொள்ளப் பிறக்கிட்டோடிய சேரலாதன் சேரமான் பெருஞ் சேரலாதன் ஆவான் என்பதும் அவன் சான்றோர் பலரால் அன்பு செயப் பெற்றதும் அறிஞர் பலராலும் மேற்கூறிய சான்றுகளால் கொள்ளப்பட்டிருக்கின்றன. மற்று, தமிழர் வரலாறுடையார், "புறத்தின் பதிப்பாசிரியர் வெண்ணிக்குயத்தியார் கரிகாலனோடு போர்செய்து பிறக்கிட்டோடிய மானத்தால் வடக்கிருந்தான் ஒரு வேந்தன் என்றதனாலும், அகத்தில் மாமூலனார் கரிகாலனோடு போர்புரிந்து வடக்கிருந்து உயிர் துறந்தவன் நெடுமை பெருமை முதலிய அடையின்றி வறிதே, "சேரலாதன்" என்றதனாலும், புறத்திற் கழாத்தலையார் பாடிய சேரன் "பெருஞ்சேரலாதன்" என அடைபெற்றோன் ஆதலினாலும், சேரலாதனும் பெருஞ் சேரலாதனும் ஒருவராகார். மேலும், பெருஞ் சேரலாதன் என்பான் ஒருவனே புறத்திற் கூறப்படுகின்றான், ஆகலின், அவனைப்பற்றி விளங்கத் தெரிதற்கு வேறு சான்றே யில்லை" யென்று கழறுகின்றார்.

இனி, இவன் வாகைப் பறந்தலையின் கண்ணும் ஒரு போர் செய்து அங்குத் தன்னை யெதிர்த்த ஒன்பது மன்னர்களை வெற்றி கொண்டான் என்பது தெரிகிறது. இது, ஆசிரியர் பரணரால்

"பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
ஒன்பது குடையு நன்பக லொழித்த
பீடின் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே" என

அகநானூற்று 125. ஆம் பாட்டின்கட் கூறப்பெறுகின்றது.

இனி இவன் வேறு சில மன்னர்களோடும் வேற்று நாட்டு மக்களோடும் போர்செய்து நிறைந்த திருவும் சிறந்த புகழும் பெற்று விளங்கினன் என்பதற்கு இவன் காலத்தே பாடப்பெற்ற பட்டினப்பாலை யென்னும் நூலே சான்றாகின்றது. அது

"பல்ஒளியர் பணிபொடுங்கத்
தொல்அருவாளர் தொழில்கேட்ப
வடவர் வாடக் குடவர் கூம்பத்
தென்னவன் திறல்கெடச் சீறி மன்னர்
மன்னெயில் கதுவும் மதனுடை நோன்றாள்
மாத்தானை மறமொய்ம்பின்
செங்கண்ணாற் செயிர்த்துநோக்கிப்
புன்போதுவர் வழிபொன்ற
இருங்கோவேள் மருங்குசாய" என்பது. மேலும்

அந்நூல், இவன் நாடுவளம் படுத்திச் செல்வநிலை மிகுதிபடுத்திய செய்தியை மிக வழகுபெறச் சுருங்கச் சொல்லி விளக்குகின்றது. அது:

"காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கிப்
பிறங்குநிலை மாடத்துஉறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ
வாயிலொடு புழையமைத்து
ஞாயிறொறும் புதைநிறீஇ" என்பது.

இதன்கண் இவன் உறையூரினின்றும் தன் தலைநகரை மாற்றிக் கொண்ட செய்தி "உறந்தைபோக்கி" யென வருதலாற் காண்க.

இனி இவன் காலத்து வாணிபநலம் மேம்பாடுற்றும் வணிகர் தம் அறந்திறம்பாது பண்டம் பகர்ந்து வயங்கியும் நிலவ இவன் நாடு சிறத்தற்கு,

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்

தென்கடல் முத்தும் குணகடற் றுகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெளிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு" எனவும்,

"புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங்
குறைபடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்
தொல்கொண்டித் துவன்றிருக்கை" எனவும் வருவன வற்றால் அறிப்படும்.

வேறு, சிலப்பதிகாரத்தில், இவன் வச்சிரநன்னாடு, மகத நாடு, அவந்திநாடு முதலிய நாடுகளைத் தான் வடதிசை நோக்கிச் செல்லுவோன், "அசைவில் ஊக்கத்து நசைபிறக் கொழியப், பகை விலக்கியது இப் பயங்கெழு மலை யென, இமையவ ருறையும் சிமையப் பிடர்த்தலைக் கொடுவரி யேற்றிக் கொள்கை யிற் பெயர்ந்து" வருங்கால், அடிப்படுத்து அவ்வந்நாட்டு வேந்தர் களாற் றரப்பட்ட கொற்றப்பந்தர், பட்டிமண்டபம், தோரண வாயில் முதலியபெற்றுச் சிறப்பெய்தினன் என்பது கூறப்படு கிறது. அன்றியும், கலிங்கத்துப் பரணியில் ஆசிரியர் சயங் கொண்டாரால்,

"செண்டு கொண்டுகரி காலனொரு காலிமயச்
சிமய மால்வரை திரித்தருளி மீளவதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்றுமுதுகிற்
பாய்புலிப்பொறி குறித்தது மறித்த பொழுதே"

எனப் "பயங்கெழு மாமலை பகைவிலக்கிய" செய்தியும் அவன் புலிப்பொறி வைத்த செய்தியும் கூறப்படுதல் காண்க. இங்ஙனமே, கரிகாலன் இமயம் சென்ற செய்தி மட்டில், தக்கயாகப் பரணியில், ஆசிரியர் ஒட்டக்கூத்தரால், "பொறைசூழ் வரையிற் புலியே றெழுதும், பொன்மே ருவரைப் பெருமான் மகளார்" எனக் கூறப்படுவதோடு அதன் உரையாசிரியராலும், "பொன்மலை யிவனதாதற்குக் காரணம் மகாமேருவின் அடி முதல் முடி கடை சோழர்களால் எழுதப்பட்ட புலிப்பொறியே யாதலாலும், கரிகாலன் கைச்செண்டால் திரித்தான் என்னும் கதையுண் டாதலாலும்" என்று கூறப்பெற்றுளது. ஆனால், இவையனைத்தையும் இற்றைக்காலச் சரித்திர ஆராய்ச்சியாளர் ஒல்லாத செயல்களா மென மறுத்துவிடுகின்றனர்.

இனி, இவன் காவிரியாறு ஆண்டு தோறும் பெருவெள்ளத்தாற் சோழநாட்டின் வளனைக் குறைத்துக்கொண்டு வந்தமை காரணமாக, அதன் இருமருங்கும் தடங்கரை கட்டி அப்பெருக்கினையும் தக்கமுறையில் பயன்படுத்திக் கொண்டனன் என்னும் செய்தி யொன்று சிலோன் தேச சரித்திரமும் தெலுங்கு நாட்டுக் கல்வெட்டுக்கள் சிலவும் வெளியிடுகின்றன. இவற்றுட் சிலோன் தேச சரித்திரம் "காவிரி கரைசெய்தற்குச் சிங்களர் பன்னீராயிரவரைச் சிறைகொண்டு சென்றான்" என்று கூறுதலை அறிஞர்கள் பலர் மறுத்துக் கல்வெட்டுச் செய்தியை உறுதி செய்து கொள்ளுகின்றனர்.

இதுகாறும் கூறப்பெற்ற செயல்களுட் கரிகாலன் செயல்களென நல்லிசைச் சான்றோர்களான தொகைநூ லாசிரியர்கள் கூறுவன வெண்ணிப்போர், வாகைப்போர், உறையூரினின்றும் பெயர்ந்தது, நாடு வளம்படுத்தது முதலியனவே யன்றிக் காவிரிக்குக் கரைகட்டிய செய்தியும் மேருவரையைச் செண்டாலடித்துப் புலிப்பொறி வைத்தசெய்தியு மல்ல.

இவன் மகள் ஆதிமந்தியென்பாள்து வரலாறு தனியே பின்னர் ஆராயப்படுகின்றமையின், ஈண்டுக் கூறிற்றிலம்.

இனி, இவன் பல புலவர்களை யாதரித்து அவர்தம் அரிய தமிழ்க்கவிகளை யேற்று அவற்றின் சொற்பொருட்சுவை யோர்ந் தும் நுகர்ந்தும் புலமை சிறந்திருந்தான். இவன் காலத்து இவனால் சிறப்புச் செய்யப்பெற்ற புலவர் பெருமக்களுட் சிறந் தார் கடியலூர் உருத்திரங் கண்ணனார், முடத்தாமக்கண்ணியார், வெண்ணிக்குயத்தியார், கழாத்தலையார் முதலியோர் ஆவர். இவருள் கடியலூர் உருத்திரங்கண்ணனார் இவன்மீது பட்டினப் பாலையென்னும் அழகிய பாட்டினைப் பாடிப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசு தரப்பெற்றார். இது, "தழுவுசெந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன் பத்தொ டாறுநூ றாயிரம்பெறப் பண்டு பட்டினப் பாலைகொண்டதும்" எனவரும் கலிங்கத்துப் பரணிப் பாடலால் அறியக் கிடக்கின்றது.

இனி, இவனது காலம் பல அறிஞரால் பலவேறு வகை யாக முடிபுசெய்து கூறப்பட்டுளது. சிலர் கி. மு. முதல் நூற்றாண்டென்பர், சிலர் கி. பி. முதல் நூற்றாண்டென்பர்; வேறுசிலர் கி. பி. மூன்று நான்காம் நூற்றாண்டுக ளென்று கூறுவர். திரு P. T. ஸ்ரீநிவாச அய்யங்கார் அவர்கள் "இவனது காலம் கி. பி. நான்காம் நூற்றாண்டின் இறுதியும் ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியு மாகும்" என்று சில சிறந்த சான்றுகளுடன் முறையே ஆராய்ந்து கூறுகின்றார்.

இனி, இவன் காலத்துச் சிறந்திருந்த நகரங்களுள் உறை யூர், காவிரிப்பூம்பட்டினம் ஆகிய இரண்டுமே மேற்கண்ட செய்யுட்களில் நாம் அறிந்தனவாகின்றன. அவற்றோடு இடை யாறு என்றும் ஒருநகரம் அவன் நாட்டின்கண் இருந்ததென் றும், அது மிக்க செல்வம் சிறந்த நகரமென்றும் கொள்ளல் வேண்டும். அது, தண்டமிழ்ச் சான்றோருட் டலைவரெனக் கருதப்படும் ஆசிரியர் நக்கீரனாரால் அகத்தில்,

"துவரப் புலர்ந்து தூமலர்க் கஞலித்
தகா நாறுந் தண்ணறுங் கதுப்பிற்
புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்
பல்கோட் டடுப்பிற் பாலுலை யிரீஇக்

கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செந் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்
பாசவ லிடித்த பரூஉக்கா ழுலக்கைக்
கடிதிடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
தீங்குலை வாழை ஓங்குமடல் இராது
நெடுங்கான் மாஅத்துக் * குறும்பறை பயிற்றும்
செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழன் இடையாற் றன்ன
நல்லிசை வெறுக்கை தருமார் (சுரனிறந்தோர்)" என்று

பாராட்டப் பெறுகின்றது. விளைத்த ஒன்று ஆயிரமாக விளையும் காவிரி புரக்கும் நாடுகிழவோன் இவனாதலால், இவனுடைய இந் நகரம் செல்வஞ் சிறத்தல் அருமை யன்றன்றே! (தொடரும்)

---

An intertrpretation of the lines printed antic is given by the author of the History of the Tamils and I quote it for examination.

"Having conquered these (அருவர், ஒளியர், இருங்கோவேள் etc), Karikal subjugated the Northern kings (வடவர்) ie the Pallava Rajas of Kanci. He pushed beyond and brought under his sway the Poduva chieftains, who ruled over the Cudappa and Karnool districts. The word Poduvar means herdsman chiefs and must refer to the rulers of the pastoral tribes that inhabited the Mullai region, north of the Marudam lands belonging to the Pallavas. The herdsmen brought under Karikal's sway were Kurumbas (குறும்பர்கள்) like those who inhabit these districts even to-day and weave the famous kambalis of that region." Then the author begins to intertrpret as: "The famous victor, the Sola Karikal, protected the families of the Kurumbar who tend (flocks) on the hill tops." Then he justifies his intertrpretation stating that "There is also plenty of epigraphical evidence to support the fact deduced from this poem that Karikal's sway extended north up to the Ceded districts, which will be discussed presently." But குறும்பறை means the partner bird, (Vide புறம் 67 கோழி, உயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ and its comment, குறும்பறை யென்றது பேடையை) and it may also mean a bird having small wings. Despite the epigraphical evidence, this deduction is hence incorrect.

# தமிழ் நாடும் தமிழ் நாட்டு வழக்கவொழுக்கங்களும்.

## இல்லறவாழ்க்கை.

(முற்றொடர்ச்சி 208 பக்கம்.)

சகோரம் என்பதோர் பறவை வடநூல் ஆட்சியிலே வந்தது. அது திங்கண் மண்டிலத்தின் நிலவை உண்பதென்று சொல்வர். தமிழ் உலகத்திற்குத் தெரியாதது. நிலாமுகி என்றும் சொல்லப் படும். சாதகம் என்பதோர் பறவைக்கு மழைத் துளியை அன்றி உணவில்லையாம். அது மழைபெய்தலையே எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்குமாம். மழைபெய்ய வேண்டுமென்று மேகத்தை நோக்கிப் பாடுதலும் செய்யுமாம். இதனைப்பற்றிப் பட்டினப்பாலை யுள்ளே உருத்திரங்கண்ணனார் என்னும் நல்லிசைப் புலவர் புனைந் துரைத்தமை காண்க. இப்புனைந்துரை கலித்தொகையினும் வந்தது. சக்கரவாகம் என்பதோர் பறவை நேமிப்புள் எனவும் படும். இப்பறவையின் ஆண் இரவு முழுதும் துணையைப் பிரிந்து செல்ல, பெண்பறவை வருந்துமாம். பாம்பிற்கு உணவு காற் றென்பர்; பாம்பின் தலையில் மணி (இரத்தினம்) உள்ளதென்பர். இரவில் பாம்பு தன் மணியை உமிழ்ந்துவைத்து அதன் ஒளியைக் கொண்டு காட்டில் மேயுமென்பர். அந்தமணியைக் காட்டில் உள்ளவர்கள் கவர்தற்கு வேறொரு பண்டத்தைக்கொண்டு மூடிவிட்டால் அது துயர் மிகுந்து விழுந்து புரண்டு இறந்து விடுமாம். இக்கருத்தை உட்கொண்டு,

> 'நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி
> கடுமுனை யலைத்த கொடுவில் ஆடவர்
> ஆகொள் பூசலில் பாடுசிறந் தெறியும்
> பெருந்துடி வள்பின் வீங்குபு நெகிழா
> மேய்மணி யிழந்த பாம்பின் நீநனி
> தேம்பினை வாழியென் னெஞ்சே' (அகம். 372) என்று

பாடல் செய்தார். இப்பாட்டின் கருத்து, களவொழுக்கம் நிகழுங் காலத்து குறியல்லாத குறிக்கண் சென்று தலைவியைக் காணாது மீளும் தலைமகன் வருந்தி, தன் னெஞ்சை நோக்கி, 'மேய்மணி

யிழந்த பாம்பைப்போல் நீ மிகவும் வருந்துகிறாய்' என்று சொன்னான் என்பது. இக்கருத்துப்பற்றி, கம்பரும் அநுமாரால் அளிக்கப்பட்ட இராமரது விரலாழியைப் பெற்ற சீதாபிராட்டியாரின் நிலைமையைப் புனைந்துரைத்தவர்,

'இழந்தமணி புற்றர வெதிர்ந்த தெனலானாள்' என்று கூறலாயினர்.

'அரவுமிழ் மணியிற் குறுகார்' என்று ஒரு புலவர் கூறினார்.

எருமை வெளியனார் மகனார் கடலனார் என்னும் நல்லிசைப் புலவரால் பாடப்பட்ட 'இருள் கிழிப்பது போல் மின்னிவானம்' என்னும் (அகம். 72) பாட்டில், தலைவன் இரவில் வரும் வழியில் புலியானது ஆண் யானையைக் கொன்று, பாம்பு மேய்வதற்கு உமிழ்ந்து வைத்த மணியாகிய விளக்கின் ஒளியில் யானையின் தசையைப் பறித்திழுக்கும் ஏதம் உள்ளதென்று தலைவி கூறியதாகச் சொல்லப்பட்டுள்ளது. இப்படிச் சொல்லப்பட்டது உண்மை நிகழ்ச்சியாமா? புனைந்துரை யன்றி மற்றென்னை? பாம்பின் மேய் மணி விளக்கு இப்போது எங்குபோயொளிந்தது? பல்லாயிரக்காவததூரத்து நாட்டிலும் மலையிலும் கடலிலும் உள்ள பொருள்களெல்லாம் ஒருங்கே குவிக்கப்பட்டு 'விண்ணிடை உலகமென்னும் மெல்லியல் மேனி நோக்கக், கண்ணடி வைத்ததன்ன' உறையூர், மதுரை, கருவூர், சென்னை முதலிய நகரங்களிலும் அது காணக்கிடையாததென்னோ?

நற்றிணைச் செய்யுள் 244ல், வண்டின் குரலை யாழின் குரலென்று அசுணமாவானது செவிசாய்த்துக் கேட்கும் என்று சொல்லப்பட்டுளது. அசுணம் என்பது இசையறிவதோர் விலங்கு என்பர். இசையறிவதாயினும் மக்களுயிர்க்கு ஏதம் செய்வது ஆகையால்

'வள்ளெயிற் றரிமா வாள்வரி வேங்கை
முள்ளெயிற் றரவே முழங்கழற் செந்தீ
ஈற்று மதமா ஏக பாதம்
கூற்றம் கோண்மா' இவற்றைப் போல அஞ்சப் படுவது ஆதலின் அதனைக் கொல்லுதற்குச் சூழ்ச்சி செய்வோர்,

மறைவான இடத்திலிருந்து யாழை வாசிப்பர். அவ்விசை கேட்டு அணுகிவந்து மயங்கி நிற்கும். அப்போது அதனை வாளால் வெட்டிக் கொல்வர். என்பர் இந்த அசுணம் வண்டின் குரலை யாழின் இசையென்று கருதிச் செவிசாய்த்துக் கேட்கும் என்று கூறப்பட்டுள்ளது. யாழிசை வரலாறு உண்மையாய் இருப்பினும் இருக்க. வண்டின் குரலை யாழிசை யென்று மயங்கிக் கேட்ட தென்றது, வண்டின் குரல் யாழின் குரலை யொத்தது என்ற உவமைப் பொருளை இவ்வாறு புனைந்துரைத்தவாறன்றி, உண்மை நிகழ்ச்சி அன்றெனத் தெளிக.

நற்றிணைச் செய்யுள் 249ல், புன்னை மலர்களில் மொய்த்த வண்டுகளின் குரலை, தலைவன் தேரில் கட்டப்பட்ட குதிரைகள் புலியின் குரலென்று மயங்கிவெருண்டு ஓடியனவென்று சொல்லப் பட்டுள்ளது. இது புலியின் குரல் வண்டுகளின் குரலை ஒக்கு மென்னும் உவமைப் பொருளைப் புனைந்துரைத்தவாறன்றி வேறன்று.

நற்றிணைச் செய்யுள் 344ல், புலியானது யானையைக்கொன்று முழங்கும் முழக்கத்தை, இடியின் ஒலியென்று குறமகளிர் கருதிக் காயவைத்த தினையைக் குவிப்பர் என்றதும் அது.

ஆய்ச்சியர் தயிர்கடையும் மத்தத்தின் ஒலியை முயலானது புலியின் முழக்கமென்று அஞ்சி ஓடியொளிக்குமென்பதும்,

'வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி முகில் பார்க்கும் (திருவையாறே)'
(தேவாரம்)
என்பதும், அது

இனிப் பாம்பிற்குச் செவிப்பொறியில்லையென்றும், கண் ணாகிய பொறியாலே கண்ணறிவும் செவியறிவும் ஒத்து நிகழும் எனவும், அதனால் அது 'கட்செவி' யென்னும் பெயர் பெற்ற தென்றும் சொல்வர். இதுவும் வடநூல் ஆட்சியிலிருந்து பிற் காலத்திலே தமிழில் நுழைந்தது. பாம்பாட்டி ஒருவனிடம் சென்று பாம்பிற்குக் காது இல்லையன்றோ என்றோம். என்னவும்

அவன் எம்மைப் பார்த்துச் சிரித்தான். பாம்பிற்குக் காதில்லை யென்று யார் சொன்னாரென்றும் கேட்டான். பின்பு அவன் துணையாக ஆராய்ச்சி செய்ததில் இரண்டு கண்ணுக்கும் பக்கத்தில் இரண்டு துளைகள் இருப்பதைப் பார்த்தோம். அவையிரண்டும் காதேயென்று அவன் துணிவுறச் சொன்னான். ஆகவே பாம்பைக் கட்செவியென்றது வடநூலார் கற்பனையென்று துணிந்து கொள்ளப்பட்டது. 'மாவு மாக்களும் ஐயறி வினவே' என்னும் சூத்திரவுரையில், பேராசிரியரும் இந்தக் கற்பனையை உண்மையென்று மயங்கி, இரண்டுணர்விற்கும் ஒருபொறியே அமைந்ததென்றார்.

இத்துணையும் கூறியதுகொண்டு, வடநூல் வழக்கிலே உள்ள கற்பனைகளும் புனைந்துரைகளும் கடைச்சங்கத்தார் காலத்திற்கு முன்பே தமிழில் புகுந்துவிட்டன என்பது தெளிந்துகொள்ளப் படும். ஆகவே நச்சினார்க்கினியர் வண்டிற்குச் செவியறிவுண் டென்று சாதிக்க முயன்றது, சங்கத்துச் சான்றோர் புனைந் துரையாகச் சொன்னவற்றை உண்மையாக மயங்கிக் கொண்ட தனாலேயாம். மால்வரை புரையும் மாடக்கூடல், பால் புரை பசுங்கதிர்க் குழவித்திங்களைக்-குறுங்கண்ணியாகவுடைய அழலவிர் சோதி அருமறைக் கடவுள்பாடிய

'கொங்குசேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ'...நீயறியும் பூவே'

என்னும் பாட்டில் வண்டை மொழிவது போலக்கொண்டு வினவியதும் புனைந்துரைவகையே. இங்ஙனம் புனைந்துரைத்தற்கு விதி

'ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானே விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவும் நுதலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்'

(தொல்-செய். 202). என்பது.

இனி, நண்டைப்பற்றி மருதநிலத்துக் கடம்பர்களை (பள்ளர்களை) வினவியதில், அவர்கள் நண்டிற்குக் காதும் உண்டென்றும் அது கண்ணிற்குப் பக்கத்திலே புடைப்பாயுள்ளதென்றும் சொல்லி, அவர்களுக்கு நண்டு உணவுப்பொருள் ஆதலால் கோடைக்காலத்தில் ஒரு குற்றியில் மணியைக் கட்டி நண்டின் வளையில் விட்டு ஆட்டினவுடன் மிக ஆழத்தில் இருக்கும் நண்டுகள் சலங்கை ஒலியைக்கேட்டுத் தண்ணீர் வரவின் ஒலியென்று கருதி மேலே வந்து கவைக்காலால் குற்றியைப் பற்றிக் கொள்ளு மென்றும் அவற்றை வெளியே குற்றியோடு கொண்டு வந்து விடுவது வழக்கமென்றும் சொன்னார்கள். இதுபற்றி ஆராய்ச்சி நடந்து வருகின்றது. இவ்வாராய்ச்சியின் முடிவைப் பின்பு வெளியிடுவாம்.

நத்தையைப்பற்றி அப்பள்ளர்களைக்கேட்க, நத்தையானது ஆமையைப்போல மேயும்போது உறுப்புக்களை வெளிப்படுத்திக் கொள்வதும் யாரையேனும் காக்கையையேனும் கண்டால் உறுப்பை உள்ளே இழுத்து அடக்கிக்கொண்டு கிடக்கும் என்றும், அதுமேயும்போது ஓட்டிலிருந்து உடல் வெளியே வர, அதிலிருந்தும் இரண்டு விரல்போலும் நீளமான உறுப்புக்கள் நிமிர்ந்து இரை கவர்கின்றனவென்றும் அந்த உறுப்புக்களிலே கண்கள் உள்ளனவென்றும் சொல்லுகிறார்கள். இந்த நத்தைகள் ஆணும் பெண்ணும் புணர்ந்து கொண்டிருப்பதைக் காணலாம். இந்த நத்தையிலே முத்து விளைந்து எடுத்து விற்றவர்கள் இருக்கிறார்கள்.

நண்டிலே ஆணும் பெண்ணும் உண்டு. புணர்ச்சியும் உண்டு. வண்டு, மீன், பாம்பு, முதலியவற்றிலும் ஆணும் பெண்ணும் புணருதல் உண்டு. புணர்ச்சி நிகழ்ச்சி கண்கூடாகவே, அவற்றிற்கு அதனால் இன்பமுண்டென்பது முடிந்தது. இன்பம் உண்டெனவே துன்பம் உண்டென்பதும் தானே முடியும். ஆகவே இன்பமும் துன்பமும் மனவுணர்வு உடையதற்குத்தானே. அப்படியாகப் பேராசிரியரும் 'புல்லுமரனும் ஓரறிவினவே' என்னும் சூத்திரத்தில் உரைத்து, புல்லிற்கும் மரத்திற்கும் மன

வுணர்வு இல்லையென்றும் அதனால் அவை இன்ப துன்பம் கொள்ளா வென்றும் கூறினர்.

சின்னாள் முன்னர் (J. C. Bose) போசு என்னும் இந்திய அறிஞர் புதிய முறையில் ஆராய்ச்சி செய்து புல் மரம் முதலிய வற்றுக்கும் இன்பதுன்ப வுணர்ச்சி உண்டென்று காட்டினர். அங்ஙனமாக மனவுணர்வென்பது மக்கட்குமாத்திரம் உரிய தென்று முன்னை இலக்கண நூலார் வரையறை செய்தது ஒரு கேள்விக்கு இடமாக இருக்கின்றது. ஒரு சார் ஆசிரியர், உயிர் என்பது எவ்வகைத்தாயினும் மனமின்றி யிருக்காதென்றும், ஓரறிவுயிர் முதலாக ஐந்தறிவுயிர் ஈறாக எல்லா உயிர்களும் அடங்குமென்றும், மனவுணர்வு என்பது அவற்றிற்கெல்லாம் பொதுவென்றும் கொண்டார். ஆகவே மக்கட்கே மனவுணர் வுண்டென்பாரும், மற்றைய ஈரறிவுயிர் முதலியவற்றிற்கும் மனவுணர் வுண்டென்பாரும் என இருதிறத்தர் ஆசிரியர் என்று பேராசிரியரும் 'ஒன்றறிவதுவே உற்றறிவதுவே' என்னும் சூத்திரவுரையுட் கூறி, அவ்வியல்பெல்லாம் வல்லார்வாய்க் கேட்டுணர்கவென்றும் சொல்லிப்போந்தார். மக்களல்லாத பிற வுயிருக்கும் மனவுணர்வு உண்டென்னும் கொள்கையை உடையவர் பவணந்தியார். மக்கட்கு மாத்திரம் மனவுணர்வு உரியதென்னும் கொள்கை அவர்க்கு உடம்பாடில்லை. மனம் என்பது பொறி களின் வழியே செல்லும் என்பது அவர் கருத்துப்போலும். அதனால்தான், அவர் மக்கள் ஆறறிவுயிர் என்பதை மறுத்து, விலங்கும் புள்ளும் ஒப்ப மக்களும் ஐயறிவுயிரே என்று முடிக்க வெண்ணி,

> 'வானவர் மக்கள் நரகர் விலங்குபுள்
> ளாதி செவியறி வோடை யறிவுயிரே' என்று

சூத்திரம் செய்தார். இக்கருத்துணராத நன்னூல் விருத்தியுரை யாசிரியர் சங்கர நமச்சிவாயப் புலவர் என்பார், தொல்காப் பியனார் கருத்தோடு நன்னூலார் கருத்தை ஒற்றுமைப்படுத்தும் கருத்துடன், மக்களுட் பெரும்பாலர் ஐயறிவளவினராய் இருத்தல்பற்றி அங்ஙனம் சூத்திரம் செய்தாரென்று பொருந்தாத் உரை கூறினர்.

தொல்காப்பியனார் 'மக்கள் தாமே ஆறறிவுயிரே' என்று சூத்திரம் செய்ததின் கருத்து இன்னதாமென்று, உரையாசிரியர் எவரும் விளங்க உரைத்தாரிலர். பவணந்தியாரும் தொல்காப்பியனார் கருத்து இன்னதென்று புலப்படாமையால், அவர் கொள்கையை மறுத்துத் தமக்குத் தோன்றியவாறு சூத்திரம் செய்தார். இவ்விருவர் மாறுகோளில் ஒருதலை துணிந்தாலன்றி உண்மை காணல் முடியாது.

மனவுணர்வு என்பதைத் தொல்காப்பியனார் இரண்டுவகைப் படுத்திக்கொண்டனர். இது பண்டைத் தமிழ் நூலார் வழக்குப் போலும். அவை மனமானது பொறியோடு ஒற்றுமைப்பட்டு (சம்பந்தப்பட்டு) உணரும் உணர்வும், அது பொறியோடு தொடர்புபடாமல் உணரும் உணர்வும் ஆகும். மக்களுக்குப் பொறியோடு தொடர்ந்துணரும் உணர்வும் உண்டு. பொறியின் தொடர்பு இல்லாமல் உணரும் உணர்வும் உண்டு. மக்களல்லாத பிறவுயிர்க்கெல்லாம் பொறியின் தொடர்புபட்ட உணர்வேயன்றித் தொடர்பில்லாத உணர்வு கிடையாது. பொறியின் தொடர்பு இல்லாமல் மனம் உணரும் உணர்வுதான் மனத்தின் தனி உணர்வும் உண்மையுணர்வுமாகும். தொல்காப்பியனார் இவ்வுண்மை கண்டே மாவைப்போலப் பொறியளவாக உணர்வுடையாரை மாக்களென்று குறியிட்டு ஐயறிவுயிருள் அடக்கி ஒழித்துப் பொறியளவின் மேற்பட்ட மனவுணர்வுடையாரை மக்கள் என்று குறியிட்டு,

'மாவும் மாக்களும் ஐயறி வுயிரே'
'மக்கள் தாமே ஆறறி வுயிரே' என்று சூத்திரம் ஓதினார்.

அற்றேல், பொறியோடு மனம் சம்பந்தப்பட்டு உணரும் உணர்வும் பொறியின் சம்பந்தமின்றி உணரும் உணர்வும் தெளிவுற விளக்கப்பட வேண்டுமேயெனின், விளக்குவாம். இங்கே மனம் உணரும் என்பதை 'வாள்வெட்டும்' என்பது போலக் கருவிகருத்தா என்பதாகக் கருத்தில் வைத்துக்கொள்க. உயிருக்கு மனம் கருவியேயாம். ஓர் உயிரின் மனமானது

மெய்யின் வழியாகப் பரிசத்தை அறிதலும், நாவின் வழியாகச் சுவையை அறிதலும், மூக்கின் வழியாக மணத்தை அறிதலும், கண்ணின் வழியாக உருவத்தை அறிதலும் காதின் வழியாக ஒலியை அறிதலும் வெளிப்படையானது. ஆயினும் அதிலே ஆழ்ந்து நோக்க வேண்டுவது மனம் சம்பந்தப்பட்டாலன்றி உடல் பரிசத்தை உணராது, நாவானது சுவையை அறியாது, மூக்கானது வாசனையை அறியாது, கண்ணானது உருவத்தை அறியாது, காதானது ஒலியை அறியாது என்பது. இதை உலகத்தில் மக்களுடைய பழக்கத்திலிருந்து அறிந்துகொள்ளலாம். பெருமிதமும் கவர்பட்ட மனமும் உடைய ஆண் மக்களையேனும் பெண்மக்களையேனும் நீங்கள் எடுத்துக்கொண்டு பார்க்க, அவரிடத்திலே ஒருவர் ஒருபொருளைச் சொல்லும்போது அவர் அதைக் கேட்கிறவர்போலவே ஆம் ஆம் என்பர், அல்லது ஈம் ஈம் என்பர். அவர் மனம் அமெரிக்காவிலோ நீயுசிலந்திலோ திரிந்து கொண்டிருக்கும். சொல்லுகிறவர் இன்னது சொல்லுகிறார் என்பதே தெரியாது. காதிருந்தும் அவர் அப்போது செவிடர். அதையறிந்து, சொல்லுகிறவர் பேச்சை நிறுத்தினால் அவர் அப்புறம் என்ன என்பர். எல்லாம் கேட்டுணர்ந்தவர் போலவே காட்டுவர். இவரிடத்திலே இப்போது மனம் பொறியோடு கூடித் தொழில் செய்யவில்லை யென்பது கண்டு கொள்ளலாம். விலைமாதர்களுடைய காது ஒருவரிடத்தே இருக்கும், மனம் அங்கில்லாத மற்றொருவரிடத்துப் பேசும் கேட்கும் ஒன்றைக் கொடுக்கும் ஒன்றை வாங்கும் ஒருவரைத் தழுவும், இவையெல்லாம் செய்யும். இதனை

> விவகார வேளையெல்லாம் சமாதி யென்றால்
> விகற்பமன்றோ மனமலைந்து விடாதோ விட்டால்
> அவதானம் நழுவுமன்றோ என்பா யாகில்
> அதற்கொருதிட் டாந்தங்கேள் ஆசை கொண்டு
> நவமாகப் பரபுருடன் தன்னைக் கூடி
> நயந்துசுகம் அனுபவித்த நாரி நெஞ்சம்
> தவமான மனைத்தொழில்கள் செய்யும் போதும்
> தழுவி அணைந் திட்டசுகம் தனைவி டாதே-என்னும்

கைவல்ய நவநீதச் செய்யுளாலும் அறிக. பொறிவழிச்செல்லாமல் மனத்தை அடக்குந்திறமை ஞானிகளுக்கேயன்றிப்பாத்தையர்க்கும் அமைந்ததென்று அந்நூலார் காட்டியது வியக்கத்தக்கதன்றோ! அது கிடக்க. ஞானிகள் காது திறந்திருக்கும். எதிர்நின்று பேசுவார் பேச்சு, காதில்விழாது. எதிரே நிற்பதன் உருவம் கண்ணிருந்தும் தெரியாது. மூக்கிருந்தும் மணம் கொள்ளாது, நாவிருந்தும் சுவையறியாது, மெய்யிருந்தும் ஊறறியாது, இவரைத்தான் 'பொறிவாயில் ஐந்தவித்தார்' 'ஆமைபோல் ஐந்தடக்கினர்' என்றும் சொல்லுப. ஞானிகளுடைய உடல் ஓரிடத்திலே இருக்க, மனம் மற்றோரிடத்தில் சென்று ஆலய வழிபாடு பண்ணும், ஆலயம் கட்டும், சாத்திரம் ஓதும், ஐந்தெழுத்தோதும், கடவுளைக் காணும், பிறவும் செய்யும்.

வினைவயிற்பிரிந்த தலைமகன் நெஞ்சம் பிரிவால் வருந்திக் கொண்டிருக்கும் தலைவிபாற் செல்லும், தலைவியின் நெஞ்சம் தலைவன்பால் நிற்கும்.

> 'அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
> நீஎமக் காகா தது' (குறள்) என்று

ஓர் தலைமகள் கூறியது காண்க. இன்னும் இவ்வாறு விரித்துரைப்பிற் பெருகும். அது நிற்க. மனத்திற்குத் தனியாக ஓர் உணவு உண்டென்பது தெளிக.

உயிர் இன்னது, மக்கள் இன்னர், இது நல்வினை, இது தீவினை, இவற்றால் இன்ப துன்ப விளைவுண்டு, இதனால் பிறவி மேன்மேல் வளரும், இவற்றை ஒழித்து இறைவனை அடைதல் எங்ஙனம், என்னும் ஆராய்ச்சிக்குரியது மனம் என வறிக. ஆகவே அவ்வகையாகப் பகுத்தறிவதையே மனவுணர்வென்று கொண்டார் தொல்காப்பியனார் என்க. இங்ஙனம் பகுத்தறிவுள்ள மக்களையும் பகுத்தறிவில்லாத விலங்கு பறவை முதலியவற்றையும் உடன்எண்ணி ஐயறிவுயிரெனப் பவணந்தியார் கூறியது பொருந்தாமை அறிக.

'பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வோடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே' என்னும்

மெய்ப்பாட்டியற் சூத்திர வுரையிலே, 'உணர்வு' என்பது அறிவுடைமை அஃதாவது உலகியலால் செய்யத் தகுவது அறிதல்' என்று பேராசிரியரும் கூறினர்.

தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும், உலகியல் உயிரியல், கடவுளியல் இவற்றை அறியும் அறிவுவிளக்கமுள்ள நூல்களைக் கற்றாரும் கற்கும் நாட்டத்தை யுடையாருமே மக்களென்று உயர்த்துச் சொல்லப் படுவார்; அல்லாதாரெல்லாம் அவற்றை நாடாது, பொறிகளின் நுகர்ச்சியை மாத்திரம் நாடும் விலங்கோடொப்பர் என்னும் கருத்துப் புலப்பட

'விலங்கொடு மக்கள் அனையர் இலங்கு நூல்
கற்றாரோடு ஏனை யவர்' என்று திருக்குறளில் எடுத்தோதினர்.

கவிகளில் இணையற்றவராகிய கம்பரும் ஒருவன் செய்யத் தக்க காரியம் இன்னவை; செய்யத் தகாத காரியம் இவை யென்னும் பகுத்தறிவே மக்களுக்குரிய உணர்வென்று சொல்லப் படுவது. அப்பகுத்தறிவு உடையாராய் தக்க காரியங்களைச் செய்து தகாத காரியங்களை விலக்குவார் யாரோ அவரே மக்களென்று உயர்த்துச் சொல்லப்பட்டார். மக்கள் வடிவினராயினும், செய்யத் தக்க காரியத்தைச் செய்யாதாரும், செய்யத் தகாத காரியத்தைச் செய்வாரும் பகுத்தறிவில்லாத விலங்கையே ஒப்பர். ஒருசார் விலங்குகள் ஆயினும் தக்க காரியம் இன்னவை, தகாத காரியம் இவை யென்று பண்டைப் பிறவித் தொடர்பினாலும் இறைவன் அருளினாலும் அறிந்து நடக்குமாயின், அவை தெய்வங்களாகக் கருதிப் போற்றப்படும் என்னும் கருத்துப்புலப்பட

'தக்க வின்ன தகாதன இன்னவென்று
ஒக்க உன்ன லராயின் உயர்ந்துள

மக்களும் விலங் கேமனு வின்னெறி
புக்க வேல்அவ் விலங்கும் புத்தேளிரே' என்று வாலி

யின் வினுக்களுக்கு விடையளிக்கும் இராமர் கூற்றிலே வைத்துக் கூறினர்.

கம்பர், விலங்குகளாயினும் பகுத்தறிவும் ஒழுக்கமும் உள்ளனவாயின் மக்களோடொப்பர் என்று கூறியொழியாது, தேவரோ டொக்கும் என்று புனைந்துரைத்தது 'விலங்கொடு மக்களனையர்' என்னும் திருக்குறட் கருத்தோடு 'மக்கட்டாமே ஆறறிவுயிரே' என்னும் சூத்திரத்தில் 'பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே' என்றதன் கருத்தையும், 'வையகத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும், தெய்வத்துள் வைக்கப் படும்' என்னும் திருக்குறட் கருத்தையும் பிணைத்து அகலப்படுத்தியதெனக் காண்க.

'பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்' என்னும் திருக்குறளும்

'விலங்கொடு மக்களனையர்' என்பதன் கருத்தை ஒட்டியதே. பயனில்லாத சொல்லையே எப்போதும் பாராட்டிப் பேசுகின்றான் ஒருவன், வடிவால் மகனென்று தோற்றப்பட்டானுயினும், மக்களுள் பதரென்று கொள்ளப்படுவன் என்பது அதன் கருத்து. உரையாசிரியர் பரிமேலழகர், 'அறிவென்னும் உள்ளீடு இல்லாமை யால் பதடி யென்றார்' என்று கூறினர். அஃது ஒருவகையான் ஒக்குமாயினும், அதன் பொருள் மேலும் விரியும். பயனில் சொல் பாராட்டுவானை மகனெனல், நெல்லுட் பதடியெனல் எனக் கூறுதே, மக்கட் பதடியெனல்' என்று கூறியதன் கருத்து நெல்லினுட் பிறந்த பதராயினும் ஒருகால் ஒரு காரியத்திற்கு உதவும், மக்களுட் பதராயினன் ஒன்றுக்கும் உதவான், அவன் ஓரறிவுயிரினும் வைத்து எண்ணப்படான் என்பதாகக் கொள்க.

'மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்புஒழுக்கம் குன்றக் கெடும்' என்னும் திருக்குறளும்
'ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்' என்னும் திருக்குறளும்

அக்கருத்தை ஒட்டியே எழுந்தன. அக்குறள்களிலே வந்த பிறப்பு என்னும் சொல்லிற்கு வருணம் (குலம்) என்று பரிமேலழகர் பொருளுரைத்தார். அது பெருந்தவறு, பார்ப்பான் கள்ளுண்டாலும், புலால் உண்டாலும், அரிசிவிற்றாலும், உண்டி விற்றாலும், அவனது ஒழுக்கத்தின் இழுக்கமேயன்றே. அவ்விழுக்கத்தின் பயனாக அவன் இழிந்த வருணத்தில் பிறந்தவனாவான் என்றால், அரசனாயினும் ஆகலாம், நிதியின் கிழவனாயினும் ஆகலாம், 'பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பார் ஆகிய அலகுடை நீழலவர்' ஆயினும் ஆகலாமே. அதனினும் சிறந்தோர் ஆக்கம் யாருக்குக் கிடைக்கும்? பல பிறவிகளிலே எல்லையில்லாமல் செய்த நல்வினைப் பயனால் கிடைத்தற்குரிய அரசும், நிதியும், கூழும் மலடிக்கு ஒருமகன்போல, பார்ப்பாருக்குத் தீயொழுக்கத்தினால் கிடைக்குமானால், அத்தீயொழுக்கம் விரும்பி முயன்றும் செய்தற்குரியதாமே. அதுவோ தெய்வப் புலவர் திருவள்ளுவனார் கருத்து? இரண்டாம் வருணமேயாக மூன்றாவது நான்காவது வருணமேயாக, வருணத்தில் சேராத புலையனேயாக. அவருள்ளே அறிவுடையார் இவரா? அவருள்ளே உலகக் கட்டறுத்து வீடுபெற்று உய்ந்தார் இலரா? பார்ப்பார் ஒழுக்கந்தவறிப் பழியெய்தினும் பின்னும் மக்கட் பிறவி தன்னையே எய்துவர் என்பது ஒருதலையா?

> ஆற்றல்சால் அறவோன் மேனாள் ஆற்றவும் அறனேஆற்றி
> மாற்றமில் சிறிதுபாவம் செய்ததன் வலத்தால் வந்து
> சீற்றமில் கயவா யாகிச் சனித்தலால் காக மாதி
> கூற்றென ஊற்றம் செய்யக் குருதிசேர் தலைய தாகி'
>
> (திருவிளையாடல்.)

என்னும் செய்யுளில் ஓர் பார்ப்பான் புண்ணியத்தை மிகவும் செய்தும் பாவம் சிறிது செய்ததனால் கரிக்குருவியாகப் பிறந்தான் என்பது பொய்யா?

பரிமேலழகர் இவ்வாறு பொருந்தா உரைகள் உரைத்தன மிகப்பல. அவற்றை இடம் வாய்த்துழி யெல்லாம் காட்டுதும். அது கிடக்க,

மனுநூலில் கண்ட நால்வகை வருணப் பாகுபாடுகளும் அவற்றின் கொள்கைகளும் வடநாட்டிற்கு ஏற்றவைகளே யன்றித் தமிழ்நாட்டிற்கு ஏலா. அந்நூலில் கண்ட பிரமசரியம் வானப்பிரத்தம் என்னும் நிலைகளும் வடநாட்டிற்கேயன்றித் தமிழ் நாட்டிற்கு ஏலா. ஆகவே இவையெல்லாம் முதற் பாவலருக்கு உடம்பாடில்லை. ஆகையாற்றான் அவற்றிற்கு அதிகாரம் வகுத்துச் சிறப்பிலக்கணம் கூறாராயினர். திருக் குறளில் வழங்கிய, அந்தணர் நூல், 'அறு தொழிலோர் நூல்' 'தென்புலத்தார்' 'இயல்புடைய மூவர்' என்றாற்போல்வன வெல்லாம் வடநூலார் மதம் பற்றிக் கூறியனவே. தந்துணிபு பற்றிக் கூறியனவல்ல. இன்னும் இதன் விரிவெல்லாம் இனி வெளியாகும் 'தமிழ் அறநூன் மேன்மை' என்னும் பொரு ளுரையுட் காண்க.

இத்துணையும் கூறியவாற்றால் ஆசிரியர் தொல்காப்பியனார் மக்களுக்குரியதென்று எடுத்தோதிய மனவுணர்வு என்பது, மேலே விளக்கப்பட்ட பகுத்தறிவென்றே மயக்கமின்றி உணரப் படும். ஆகவே பவணந்தியார் அவ்வாசிரியர் கருத்தை உணராது

'வானவர் மக்கள் நரகர் விலங்குபுள்
ளாதி செவியறிவோ டையறி வுயிரே' என்று சூத்திரம்

ஓதி, மக்களும் விலங்கும் ஒத்த அறிவை யுடையன வென்று காட்டியது குற்றமாதல் அறிக.

மக்கட் பிறப்பை விலங்கு பறவை முதலியவற்றிற்பிரித்து உயர்த்துதற்குள்ள காரணம் ஆறறிவுடைமை ஒன்று. இரண் டாவது பேசும் பாடை அமைந்திருப்பது. மூன்றாவது பிற உயிர்களையெல்லாம் அடக்கியாளும் திறமை வாய்த்திருப்பது. ஆகவே எல்லாப் பிறவிகளினும் மக்கட் பிறவி உயர்ந்ததென்பது முடிந்தது.

இனி இழிந்த பிறவிகளிலே பிறக்காமல் மக்களாகப் பிறத் தல் கடலைக் கைகொண்டு நீந்தி அக்கரை சேர்ந்தாற்போலும்.

(தொடரும்)

---



"நமது அருமைச் சோமசுந்தரம் நாய்பிடிக்கிச் சோமன் ஆகிய வரலாறு இதுவே!" பக்.–303.

# அ. சோமசுந்தரம்.

அ. சோமசுந்தரம் என்னும் மாணவன் சென்ற ஆண்டில் நம் பள்ளிக்கூடத்தே நடந்த பரிசுவிழாவில் (Prize distribution day) நன்னடத்தைப் பரிசினைப் பெற்றபோது, அதனை மனமகிழ்ந் தளித்த மாநேசர் திருமிகு லாம்பு துரையவர்கள் 'கடவுள் உன்னை ஆசீர்வதிப்பாராக' என்று சொல்லிக் கொடுக்குமுன், அங்குக் கூடியிருந்த ஆயிரக்கணக்கினராய மாணவர்கள் எல்லோரும் ஒருமித்துக் கைதட்டி மிக்க ஆரவாரஞ் செய்தனர். முன்னெல் லாம் இத்தகைய பரிசொன்று நம் பள்ளிக்கூடத்தே யிருந்த தில்லை. சென்ற இரண்டு ஆண்டுகளாகவே இப்பரிசு, இப்பள்ளிக் கூடத்துப் பழைய மாணவராகிய ஒரு கனவானுடைய நன் கொடையால் கொடுபட்டு வருகின்றது. இப்பள்ளிக் கூடத்தே, நான்காண்டிற்குமேல் படித்துவருபவனும், தனக்கு ஆசிரியராக இருந்த இருக்கும் ஆசிரியர்கள் எல்லோராலும் நல்லபிள்ளை என்று கூறப்பெறுவோனுமாகிய ஒருவனுக்கே இப்பரிசு கொடுக்கப்படும். இது இரண்டு பவுனில் செய்யப்படுவதாயினும், இதன் அருமை பெருமைகளை நோக்கின், விலைமதிக்க முடியாத தொன்றாகக் கொள்ளவேண்டும். இந்த ஆண்டில், சோம சுந்தரத்தைப்போலவே இப்பரிசுபெறத் தகுதிவாய்ந்தவர்களாக வேறு இரண்டு மாணவர்கள் குறிக்கப்பட்டதுண்டு. அவர்கள் பெயர் X, Y என்று வைத்துக்கொள்வோம். இவர்களுள் X என்பவனைப்பற்றி அபிப்பிராயம் சொல்ல நேர்ந்தபோது, தேகப் பயிற்சி யாசிரியர் என் வகுப்பிற்கு இவன் வந்தல்லவோ நான் அபிப்பிராயம் சொல்லக் கூடுமென்றார். Y என்பவனைப்பற்றித்

இஃதும் அடுத்த கட்டுரையும், தஞ்சை St. Peter's High Schoolல் வெளிவரும் 'Petrinian' என்ற இதழிற்கென்று எழுதப்பட்டு வெளி வந்திருப்பவை; மொழிலன்பர்களாய பள்ளிக்கூட மாணவர்கள் பொருட்டு இங்கும் வெளியிடப்படுகின்றன.

தமிழாசிரியர் ஒருவர், நல்லபிள்ளைதான், கடைசிப் 'பீரியட்' தமிழாயிருந்தால் சிலவேளை இவனைக் காண்பது அரிதாகும். ஆயினும் இவன் தமிழிலும் உயர்ந்த மார்க்கு வாங்கிவிடக் கூடிய கெட்டிக்காரனே என்றார். அந்தோ! இவ்விருமாணவர்களும் இன்னும் சற்றுத் திறமையாக நடந்துகொண்டிருந்தால், நன்னடத்தைப் பரிசு ஒன்றுதான் இப்போது இருந்தாலும், நம்மாநேசரவர்கள் இவர்கட்கும் எங்ஙனமாவது தனிப் பரிசுகள் கொடுக்க ஏற்பாடு செய்திருப்பார்.

பரிசுவிழா மகிழ்ச்சிக்காக ஒருநாள் விடுமுறை விடுவது வழக்கம். அடுத்த பள்ளிக்கூட நாளிலும், ஒன்றிரண்டு 'பீரியட்' நேரங்கள் பரிசைப்பற்றிய பேச்சுக்களாகவே முடிந்தன. ப. கல்யாணசுந்தரம் என்னும் மாணவன், ஒரு பாடங்கூடத் தவறாமல் எல்லாப் பாடங்களிலும் முதற்பரிசு பெற்று, ஒரு வெள்ளி மடலையும் ஒரு அடுக்குப் புத்தகங்களையும் வாங்கியதையும், டேவிட் கிறிஸ்டியன் என்னும் மாணவன் பந்தயப் பரிசுகளில் ஒன்றும் தவறாமல் பல விலை உயர்ந்த பரிசுகள் வாங்கி வைத்துக்கொண்டதையும் பாராட்டிப் பேசாத வகுப்பு இல்லை. இரண்டாவது பாரத்தில் படிக்கும் சிறுவன் ஒருவன் இம்மகிழ்ச்சியில் ஆழ்ந்து, தன் ஆசிரியரை நோக்கி, 'சார் தினந்தோறும் படிப்புப் போட்டிகளும், விளையாட்டுப் போட்டிகளும், பரிசு விழாவுமாக விருந்தால் மிகுந்த மகிழ்ச்சியாக இருக்கும் சார்' என்றனும். இதனல் இப்பரிசு விழா மாணவர்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சியைத்தந்து ஊக்கப் படுத்துகிறது என்பதை உணரலாகுமன்றோ! அன்று, தமிழ் வகுப்பில் ஒரு மாணவன், சோமசுந்தரத்தின் நன்னடத்தையைப் பற்றிப் புகழ்ந்துபேச, பலமாணவர்கள் அப்பரிசு அவனுக்கே கொடுத்தற்குரியது என்று கூற, ஆசிரியரும் பொதுவாக அவன் உயர் குணங்களைப் பாராட்டிவிட்டுச் சிறப்பாக அவனிடம் காணப்படும் பெருந்தன்மையினைச் சுட்டிக் கூறினர். அப்போது ஒரு மாணவன் 'பெருந்தன்மை' என்பதை விரித்துக்கூறும்படி கேட்டுக்கொள்ள, அவ்வாசிரியர் நன்று எனக்கூறிச் சோமசுந்தரத்தினிடம் காணப்படும் பெருந்தன்மைகளைக்காட்டியே ஒரு சிறு விரிவுரை (பிரசங்கம்) செய்தார். அதுவே இங்கு எழுதப்படுகிறது.

"எனது அன்பார்ந்த மாணவர்களே! இந்த நன்னடத்தைப் பரிசு பெறுதற்கு உரியவர்கள்—இந்தச் சோமசுந்தரம் ஒருவன் அல்லன்—எத்தனையோ சோமசுந்தரர்களாக நீங்கள் எல்லீரும் இருக்கின்றீர்கள். இப்பரிசு ஒருவனுக்குக் கொடுக்கப்பட்ட தன்று; ஒருவன் நற்குணத்திற்குக் கொடுக்கப்பட்டதாகும். எனவே, அந்த நற்குணம் உடைய உங்கள் எல்லோருக்கும் இது பொதுவானதே. எப்படி நம் 'டேவிட் கிறிஸ்டியன்' மன்னார்குடியிற் பெற்ற பெருமை, நம் பள்ளிக்கூட மாணவர்கட் கெல்லாம் பொதுவோ, அதுபோலவேதான் இப்பரிசும் உங்கள் எல்லோருக்கும் பொதுவானதாகும்.

சோமசுந்தரம் பெற்ற பரிசு, படிப்பினாலும் பந்தய வெற்றி யினாலும் பெற்ற மற்றப் பரிசுகட்கு ஒரு சிறிதும் குறைந்த தன்று. ஒருவன் மிகக் கெட்டிக்காரன் என்று பெயர் வாங்குவ தற்கு எவ்வளவு அரும்பாடுபட்டு உழைத்துப் பயிலவேண்டு மென்பது உங்கட்குத் தெரியும். அவ்வாறே நல்லபிள்ளை என்று பெயர் வாங்குவதற்கும் அதைவிட மிக்க அரும்பாடுபடுதல் வேண்டும்.

மிகக் கெட்டிக்காரனாகவுள்ள ஒருவன் இடையில் ஒரு நாள் படிக்காமல் வந்தோ, ஆராயாமல் விரைந்து ஏதேனும் கூறியோ, தன் ஆற்றலைக் காட்டிக்கொள்ளத் தவறினும், அவன் மீண்டும் தன் ஆற்றலை அடைந்து கொள்வதில் ஒரு குறையும் இல்லை. ஆனால் நல்லபிள்ளை என்று பெயர் வாங்கிய ஒருவன், இடையொரு நாள் சிறிது வழுக்கி வீழ்ந்தாலும், அவன் மீண்டும் எழுந்து முன் நிலையினை அடைதல் என்பது ஒருநாளும் இல்லை. அவன் வெகு நாளாகக் காப்பாற்றிவந்த பெருமையெல்லாம் 'பிறரை ஏமாற்றி வந்த பொய்ந்நிலை' யென்று உலகம் எண்ணிவிடும். அதனால் அப்பெருமைகளெல்லாம் அடியோடு கவிழ்ந்துபோகும். இதனாலன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவனார்,

> " தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
> நிலையின் இழிந்தக் கடை "

என்று

அருமையாகக் கூறிவைத்துளார். பாருங்கள். மக்கள் தங்கள் தலைமயிரைத் தலையிலிருக்கும் வரையில் எவ்வளவு வகைவகையான கோலங்கள் செய்து பார்த்துப் பார்த்து மகிழ்கின்றனர்! எவ்வளவு கருத்துடன் போற்றி வளர்க்கின்றனர்! அது, அந்தோ! அந்நிலையை விட்டுவிட்டால், எவ்வளவு தூரம் அருவருத்துத் தள்ளிவிடுகின்றனர்! இங்ஙனந்தான், இவன் நல்லபிள்ளை என்று உலகத்தார் மதித்துவரும் ஒருவனிடம், என்றோ, ஒருநாள் ஒரு சிறு தவறு காணினும், அவனை உலகம் அந்நிலையினின்றும் நீக்கித் தள்ளிவிடுகின்றது. ஆகவே, ஒருவன் 'நல்லபிள்ளை' என்ற பெயர் வாங்குவது எவ்வளவு அருமையானது! அதனை நிலை நிறுத்துவது எவ்வளவு பொறுப்புள்ளது! என்பதை எண்ணிப் பாருங்கள்! கெட்டிக்காரன் என்னும் பதவியினும் நல்லபிள்ளை என்னும் பதவியின் உயர்வினை எண்ணிப் பார்த்தறியுங்கள்!

சோமசுந்தரத்தை நல்லபிள்ளை என்று கூறுவதற்கு உரிய காரணங்கள், அவனிடம் காணப்படும் பல நற்குணங்களேயாகும். அந்த நற்குணங்களிலெல்லாம் மிகச் சிறந்ததொன்று, அவனிடம் காணப்படும் பெருந்தன்மையாகும். பெருந்தன்மையென்பது தன்னலமறுத்தல், தன் துயர் பொறுத்தல், பிறர் பிழை மறத்தல், பிறர் நலம் விரும்பல் முதலாய உயர்ந்த அடிப்படைச் சுவர்களின்மீது கட்டப்பட்டிருக்கும் சிறந்ததொரு மாளிகையாகும். இன்பத்தை விரும்புவதும் துன்பத்தை வெறுப்பதும் உலகியற்கை. தன்னலத்தையே பார்ப்பதும் பிறர் நலத்தைப் பாராமையும் உலகியற்கை. இங்ஙனம் உலகம் சென்றுகொண்டிருக்கும் வழியொன்றாக, பெருந்தன்மையுடையோர் செல்லும் வழி அதனை எதிர்த்துச் செல்லும் வேறோர் வழியாகும். பாருங்கள், ஒரு ஆறு ஓடும் வழியில் நீந்திச்செல்வது எவ்வளவு இலகுவானது! அதனை எதிர்த்து நீந்துவது எவ்வளவு வருத்தமானது! இதுபோலவேதான், பெருந்தன்மையுடையோர் உலகியலை எதிர்த்துச் செல்லும்போது அவர்கள் அடையும் கேடுபாடுகள் (கஷ்ட நஷ்டங்கள்) மிக் மிகப் பலவாகும். வேறெங்கும் போகவேண்டாம். நம் சோமசுந்தரம் பெருந்

தன்மையாக நடந்துகொண்டதன் காரணமாக, அவனுக்கு உண்டாகிய துன்பங்கள், யானறிந்த அளவில் பலவாகும். யானறியாதன எத்தனையோ இருக்கலாம். சோமசுந்தரம், பாவம், ஒருவர்க்கு ஒரு துன்பமும் செய்யாதிருக்கும்போதே, அவன் பெருந்தன்மை காரணமாக, சில மாணவர்களால் பழிக்கப்பட்ட சமயம், திட்டப் பெற்ற சமயம், தாக்கப்பெற்ற சமயம் பலவுள. சோமசுந்தரத்திற்கு மாணவர் சிலர் வைத்த பெயர்கள், உங்களுக்குத்தெரிந்திருக்குமோ தெரியாவோ அறிந்திலேன். அவை:— 'தொடை நடுக்கிச் சோமன்' 'தூங்கு மூஞ்சிச் சோமன்' 'நாய் பிடிக்கிச் சோமன்' 'நாவல்மரச் சோமன்' 'கோவிந்தாச் சோமன்' எனப்பலவாகும். இப்படி எதுகை மோனைகளுடன் அமைந்த இப்பெயர்கள், ஒருகாலத்தில் ஒருபுலவரால் அமைக்கப்பட்டவையல்ல. அந்தோ! பல காலத்தில் பல துன்பந்துயரங்களைத் தந்து வந்தவையாகும்.

இவற்றுள் 'தொடைநடுக்கிச் சோமன்' என்பது வந்த காரணம்—உபாத்தியாயர்களின் அபாரதம் தண்டனைகளுக்கு அஞ்சி, அவன் பள்ளிக்கூடம் தொடங்குவதற்கு அரைமணி கால்மணி முன்னே வந்துவிடுவது வழக்கம். ஒருநாள் கூட 'லீவ்' இன்றி வாராதிருக்கமாட்டான். தக்க காரணமிருந்தாலன்றி 'லீவ்' பெறமாட்டான். ஆசிரியர்களை வெளியிடங்களில் எங்குக் கண்டாலும் வணங்குவான். பள்ளிக்கூடத்தில் முதலில் காணும்போதும், சாயுங்காலம் பிரியும்போதும் கட்டாயம் வணங்குவான். இங்ஙனமெல்லாம் அவன் நியதி தவறாமலும் வணக்க ஒடுக்கமாகவும் நடந்துகொள்வதுபற்றி, அவனைச் சில மாணவர் எளனஞ் செய்வாராயினர். ஒரு 'ஐஸ்கூல்' மாணவனுக்கு இருக்கவேண்டிய விறைப்பு அவனிடம் இல்லை என்றும், அதனால் தங்கட்கெல்லாம்கூடப் பெருமை குறைந்துபோகின்றதென்றும் அவர்கள் எண்ணுவாராயினர். அதன்மேல், ஒருமகான் இட்ட பெயர்தான் தொடைநடுக்கிச் சோமன் என்பது.

இனி, தூங்குமூஞ்சிச் சோமன் (இது சில சமயங்களில் சோம்பேறிச் சோமன் என்றும் மாறும்) என்பதும் ஏறத்தாழ மேற்கூறிய பெயர்போன்றதொன்றேயாகும். பள்ளிக்கூடமோ

வகுப்போ விடக்கூட நேரமில்லாமல், திடுதிடெனப் 'பென்சு' களைத் தாண்டியும், ஏறிக்குதித்தும், மாடிப்படிகள், நிலைகள் போன்ற இடுக்கான இடங்களில் இடித்துத் தள்ளிக்கொண்டும் விரைந்து செல்லும் சில பிள்ளைகளைப்போலன்றி, நம் சோம சுந்தரம் வகுப்புப் பிள்ளைகளெல்லாம் போம்வரை வகுப்பிலிருந்து, பின்மெதுவாகப் போவதுபற்றி ஒரு கனவான் இட்ட பெயர் இது. சோம சுந்தரம் கடைசியாகப் போகும்போது வகுப்பை ஒரு தரம் பார்த்து, யாராவது புத்தகம்; குடை, உணவுப் பாத்திரம் முதலியவை வைத்துவிட்டு மறந்து போயிருப்பார் களாயின், அவை அடுத்த நாள் அவர்கட்குக் கிடைப்பது அருமையாகலின், அவைகளை எடுத்து நம் இராமசாமியிடம் ஒப்புவித்துவிட்டுச் செல்வான். ஒரு சமயம் நம் சோமசுந்தரத் திற்கு இப்பெயரைத் தந்த கனவானே, தன் குடையினை அவசரத்தில்வைத்து ஏகிவிட, அதனை எடுத்த சோம சுந்தரம் தான் போகவேண்டிய வழியின் வேறானவழியில் இரு 'பர்லாங்க்' தூரம் விரைந்துசென்று அவனிடம் சேர்த்தவிட்டு, மீண்டும் தன் வீட்டிற்குத் திரும்பியிருக்கிறான்.

'இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு' என்பது திருக்குறள்.

தனக்கு ஒரு துன்பம் செய்தவர்களுக்கும் தான் நன்மையே செய்தல்வேண்டும்; அங்ஙனம் செய்யாக்கால் அது பெருந் தன்மையாகாது என்பது இதன் கருத்து. இப்பெருந்தன்மை நம் சோமசுந்தரத்தினிடம் காணப்பட்டதைப் பாருங்கள்.

இனி, 'நாய்பிடிக்கிச் சோமன்' என்று இவனுக்குப் பெயர் வந்த வேடிக்கையையும் கேளுங்கள். இரண்டு ஆண்டுகளின் முன்னே ஒரு குருடன் இப்பள்ளிக்கூடத்திற்கு வந்து சில விகடம்செய்து உங்கள் உதவிகளைப் பெற்றுப்போனது நினைவி லிருக்கலாம். அவன் தனக்கு வழிகாட்ட ஒரு நாயைப் பழக்கி வைத்திருந்தானன்றோ! அந்த நாயைக்கொண்டு பள்ளிக்கூடத்தில் நுழைந்த அக்குருடன், கூடியிருந்த மாணவர்களிடம் தன் நாயை ஓரிடத்தில் கட்டிப் பார்த்துக்கொள்ளவும், தன்னைத்

தலைமையாசிரியரவர்கள் அறைக்கு அழைத்தேகவும் கெஞ்சி நின்றான். நாயை வாங்கிக்கட்டவோ குருடனை அழைத்தேகவோ யாரும் முன்வரவில்லை. நம் சோமசுந்தரமே முன்வந்து, அந் நாயைப் பிடித்துக் கட்டிவிட்டு, அதுசமயம் அக்குருடன் கையில் கோலும் இல்லையாகவும், அவன் கையினைக் கூசாமற் பிடித்து மெதுவாக அழைத்துச் சென்றான். இவர்கள் போவதற்கும் வழியில்லாமல், பல பிள்ளைகள், கீழும், மாடிப்படியிலும், (என் மாடிக் கை பிடிச்சுவரிலும் கூட) நின்று வேடிக்கை பார்த்துச் சிரித்துச் சிரித்து மகிழ்ந்தனர். இம்மட்டுமோ! ஒரு நல்ல பிள்ளை, அந்நாயின் தலையில் ஒரு தட்டுத்தட்டி, அதன் காதைப் பிடித்து இழுத்தது. மற்றொரு நல்ல பிள்ளை அதன் அருகே தன் 'சைகிளைக்' கொண்டுபோய்த் திடுமென அதன்மேல் மோதிற்று. இன்னொரு நல்ல பிள்ளை, நம் சோமுக்கும் அக் குருடனுக்கும் இடையே தன் சைகிளைச் செலுத்திக் குருடனை இடறி விழச்செய்தது. இங்ஙனம், அங்குக் கூடியிருந்த நம் அருமை மாணவர்களின் செய்கைகளை, விரித்துப்பேச இப்போது நேரமில்லை. இந்தச் சமயத்திற்றான், அங்கிருந்த குறும்பு ஒன்று, நம் சோமுக்கு, அந்நாயைப் பிடித்துக் கட்டினமையால், 'நாய் பிடிக்கிச் சோமன்' என ஒரு பெயர் வைத்தது. நமது அருமைச் சோமசுந்தரம் நாய்பிடிக்கிச் சோமன் ஆகிய வரலாறு இதுவே! இச்செய்கையும் இப்பெயரும் புகழ்ச்சியே யாகும் என்பதை அறியாத மாணவர் சிலர் இகழ்ச்சியாகவே எண்ணிக் கூறி வருவாராயினர். நம் சோமசுந்தரம் மற்றொரு சமயம் செய்த இதே மாதிரிச் செய்கையே, அவனை முன்னுக்குக் கொண்டு வரப்போவதை நீங்கள் பின்னே அறிவீர்கள்.

இனி, 'நாவல்மரச் சோமன்' என்னும் பெயர் வந்த வரலாற்றைச் சொல்ல என்மனம் வருந்துகின்றது. அது ஒரு துன்ப நிகழ்ச்சியாகும். நான், தமிழ்ப்பாடத்தில், செய்யுள் அருத்தம் முதலியவைகளை நேரில்கேட்டு, அவற்றை ஒப்புவித்த மாணவர்களின் புத்தகங்களில் கைக்குறி (Initial) வைத்துத் தருவது உங்கட்குத்தெரியும். சோமசுந்தரம் ஐந்தாவதுபாரம் படிக்கையில், ஒரு பையன் அவனிடம் தன் புத்தகத்தைத் தந்து

'இதை உன் புத்தகமென்று தமிழையாவிடம் தந்து ஒப்புவித்து அவருடைய கையெழுத்து வாங்கித் தந்துவிடு' என்று கேட்டுக் கொண்டான். ஐயோ! மாணவர் மனப்பாடம் செய்யும் வேலை பற்றி, ஒரு குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட பகுதியை எல்லோரும் ஒப்புவித்து விடவேண்டுமென்று கட்டாயப்படுத் தாமல், அவரவர் திறமைக்குத் தக்கபடி சிலநாள் முன்னே பின்னே ஒப்புவித்துவரச் செய்திருப்பது இந்த ஏற்பாடு. இதன் உயர்வினை உணர்ந்து கொள்ளாமல் மேற்கூறியவாறெல்லாம் என்னை ஏமாற்ற நினைப்பவர்கள், பாவம், என்னையன்று தங்களையே ஏமாற்றிக் கொள்பவர்கள் என்பதை அறிந்துகொள்வதில்லை! அஃதிருக்கட்டும். சோமசுந்தரம் அங்ஙனம் செய்ய ஒப்புக் கொள்ளவில்லை. அதன்மேல் அம்மாணவன், அடுத்த நாள், தன் எண்ணத்தை மற்றொரு பையன்வழியாக நிறைவேற்ற முயன்றான். அவனும் அவனுக்கு உதவிசெய்ய முன்வந்த தோழனும் அகப்பட்டுக்கொண்டனர். அன்று பள்ளிக்கூடம் விட்டு வெளிவருங்காலை, அவன், 'தமிழ் ஐயாக்களுக்கு இவ்வளவு சாமர்த்தியம் ஏது? இந்தப் பயல் நாய்பிடிக்கிச் சோமன்றான் அவரிடம் சொல்லியிருக்க வேண்டும்' என்று கூறிக்கொண்டு வந்தவன், சோமசுந்தரத்திடம் சென்று, 'தமிழையாவுக்கு நீதான் சொன்னவன், இருக்கட்டும், ஒருகை பார்த்துக்கொள்கிறேன்' என்றான், சோமு 'ஐயோ நான் ஒரு பாவமும் அறியேனே' என்றான். என்றவுடன் அவன், நல்லது, 'முரட்டுப்பலத்தின் ஆணைப்படியே உலகம் நடக்கவேண்டுமென்பது, தேச சரித்திரம் (History) படித்தும் உனக்குத் தெரியவில்லையாயின், நான் தெரிய வைக்கும் வழியில் தெரியவைக்கிறேன்' என்பதுபோல் ஒரு உறுமு உறுமினான். சோமசுந்தரம் 'எந்த முரட்டுப்பலமும் நியாய பலத்தினை ஒன்றும் செய்துவிட இயலாது' என்பதைக் கூறுவான்போல், 'இச்' செனும் ஒருவகை ஒலிக்குறி செய்தான். இவ்வளவு தான். இது நடந்த இரண்டு வாரங்களின் பின் ஒரு நாள் அந்திநேரத்தில் சோமசுந்தரம் இராசாகோரிப் பக்கத்தில் வெளியே போய் வருகையில், ஒரு நாவல் மரத்தினடியில் அம்மாணவன் பதுங்கியிருந்து திடீரெனச் சோமசுந்தரத்தினைத் தாக்கினான். சோமு ஒன்றும் எதிர்பாராதவனாகையால், முதலில்

அவன் கன்னத்தில் இரண்டு மூன்று அறைகள் பட்பட்டென்று விழுந்துவிட்டன. பின், சோமு அவ்வடியிலிருந்து தப்புவதற்குத் தான் பின்னே செல்ல நினைத்தான். வேலியொன்று பின்னிருந்து தடுத்தது. அதனால் தற்காப்பாக, (Defence) அம்மாணவனைச் சற்றுப் பின்னே தள்ளினான். பின்சென்ற அம்மாணவன், பாவம், பின்னேயிருந்த மாவேரில் இடறிக் கீழே வீழ்ந்து விட்டான். விழும்போது வலது கையை ஊன்றி விட்டமையின், தெய்வச் செயலால் ஒடிந்து போகாவிடினும், நன்றாகச் சுளுக்கிக்கொண்டது. எக்காரணத்தாலோ அக் கை நீட்டவுமுடியவில்லை மடக்கவு முடியவில்லை. சில விநாடிகள் எழுந்திருக்கவே முடியவில்லை. இந்த நிலையில் நம் சோமு அவனுக்குக் கைம்மாறு செய்வதாயின், தன் கை சலிக்கும்வரை செய்திருக்கலாம். ஆ! சோமுவின் பெருந்தன்மையினை என் சொல்வது! கீழே விழுந்தவுடன், தான் நினையாத நிகழ்ச்சியாகலின், சற்றுக் கலங்கினான். சில விநாடிகள் எழுந்திருக்க முடியாது போகவே, மிகவும் கலங்கித் திடுக்கிட்டான். ஓடித் தூக்கிவிட்டான். என்ன ஐயா கையிலென்று கேட்டுக் கையை மெதுவாக நீட்டப் பார்த்தான். அம்மூர்க்கன் இந்த நன்மைகளை உணர்வானோ! என்னைத் தள்ளிவிட்டோமென்று செருக்கு அடைகிறாய்! பார்! எட்டு நாளைக்குள் உன்னை உதைத்துப் புரிகட்டி இழுக்காவிட்டால் என் பெயர்.........................அன்று என்றான். கேட்ட சோமு, 'ஐயா, தங்கள் அரிய பலத்தை அளந்துகொள்ள இச்சிறியேன் உதவி வேண்டியிருந்தால், தாங்கள், என்றைக்கு, எங்கு, வரக் கட்டளையிட்டாலும், அடியேன், அன்று, அங்கு, வந்து சித்தமாகக் காத்திருப்பேன்' என்றான். அவ்வளவு தான். உருட்டிப் பார்த்துவிட்டுச் சென்ற அவ்வீரன் அப்பால் நம் சோமுவை உதைத்ததாகவோ, புரிகட்டி இழுத்ததாகவோ எனக்குத் தெரியவில்லை. அவனுக்கு இரண்டாம் வேற்றுமைக்குமேல் மூன்றும் வேற்றுமை தெரியாதோ என்னவோ! தான் சோமுவை நாவல் மரத்தடியில் அடித்ததுமட்டும் மாணவர்கட்கு விளம்பரம் செய்து, 'நாவல்மரச் சோமன்' என்ற பெயரையும் வாங்கி வைத்தவன், சோமுவால் தனக்கு எய்திய நிகழ்ச்சிகளைச் சொல்லிக்கொள்ளவேயில்லை. சோமுவோ, ஒரு வேற்றுமையும் அறியாதவனாகையால்

இதைப்பற்றி யாருக்கும் ஏதும் சொல்லவேயில்லை. இந்த நிகழ்ச்சியில் ஒன்று கவனித்திருப்பீர்கள். தன்னை அடித்த மாணவனைத் தான் நன்கு அடிக்கும் சமயம் ஏற்படினும், சோமு அதனைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. ஒருவனோடு போர் புரிவதற்கு நிற்கும் ஒருவன், எதிரி ஆயுதம் இழந்தோ, அஞ்சிப் புறங்காட்டியோ, தெய்வச்செயலான வேறு தடைகளை யடைந்தோ சமயமிழந்து நிற்கும்போது, அதனைத் துணையாகக் கொண்டு போர் செய்து வென்று விடுவது வீரப்போராகாது. பண்டைக் காலத்தே நிகழ்ந்த போர்களில் இவ்வுண்மைகளை விளக்கிக் காட்டும் நிகழ்ச்சிகள் பலவுள. இராமபிரானது படை வலி, துணைவலி முதலியவற்றை நன்கு அறிந்துகொள்ளாத இராவணன், மானிடன் தானே என்று நினைத்து முதல் நாள், தக்க போர் முயற்சியின்றிப் போர்செய்ய வந்துவிட்டான். வந்த பின் இராமபிரானது அம்பொன்றாலே, மானிடன் சிறப்பினையும் தன் அறியாமையினையும் தெரிந்து திடுக்கிட்டான். சுருங்கக் கூறின், சின்னேரம் போர் செய்வதற்குள்ளேயே தன் ஆயுதங் களையெல்லாம் இழந்து, செய்வது இன்னதெனத் தெரியாது திகைத்து நின்றான். இச்சமயம் இராமபிரான் அவனைக் கொல்ல நினைத்தால், ஒரு அம்பே போதும். யுத்த காண்டம் என்று ஒரு காண்டம் விரிந்திராது. பெருந்தன்மையையே உருவாகக் கொண்டு வந்தவன் என்று கூறத்தகும் இராமபிரானே அவ்வாறு செய்பவன்! இராவணனைக் கண்டு இரக்கமுற்றான். அப்போதும் பலநீதிகளைச் சொன்னான். மீண்டும்போர்தான் வேண்டுமென்றால், தக்க ஏற்பாட்டுடன் நாளை வந்து சேர் என்று விடை தந்தருளி அனுப்பினான். இதனை

ஆளை யாஉனக் கமைந்தன, மாருதம் அறைந்த
பூளை யாயின ; கண்டனை ; இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் ; நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல் என்ற

இனிய செய்யுளால் அறியலாம். இந்தப் பாட்டில் இராமபிரான் இராவணனை நோக்கி, உன்படைகள் காற்றில் பறக்கும் பஞ்செனப் பறந்தன ; இதனை நீ அறிந்தனை ; இன்னும் போர் செய்யவே

எண்ணமிருப்பின் நாளை வா — என உயிர்ப்பிச்சை தந்து அனுப்பியது குறிக்கப்படுவது காண்பீர்கள். இந்த உயர்ந்த செய்கைக்கு ஏதுவாக நின்ற இராமபிரானது பெருந்தன்மையைச் சோமசுந்தரத்தின் செயல் நமக்கு நினைப்பூட்டுகின்றதன்றோ! கீழே விழுந்துவிட்டவனோடு சண்டையிட மனமில்லா திருந்ததோடு, அம் மாணவன் தன்னோடு போரிட மற்றொரு சமயம் குறித்தபோதும், தானும் அதற்கிசைந்து நின்றானன்றோ! இதுவே உண்மைப் பெருந்தன்மையாகும்.

இனி, 'கோவிந்தாச் சோமன்' என்பதும் பரிதாபம் கொள்ளத்தக்க ஒரு செயலைக் காட்டும் பெயராகும். மாணவர் வகுப்பில் வைத்துக் குறித்துக் கொள்ளும் கைக்குறிப்பு நோட்டு (Rough Note) கூடிய வரையில் பெரியதாகவும் நன்றாகக் கட்டப்பட்டதாகவும் (Binding) இருக்கவேண்டு மென்றும், ஆங்கிலம், தமிழ், கணக்கு, சரித்திரம், பொது அறிவு முதலாய வற்றிற்குத் தனித்தனி இடம் ஒதுக்கிவைக்க வேண்டுமெனவும், கையெழுத்து அவசர எழுத்துக்களாக இல்லாமல் கூடியவரை அழகாகவும் திருத்தமாகவும் இருக்கவேண்டு மெனவும், மையினாலே எழுதுவதே நல்லதெனவும் நான் சொல்லிவருவதை நீங்கள் அறிவீர்கள். அதன்படி செய்து வருபவர்கள் மிகச் சிலரே. அவர்களுள் நம் சோமு ஒருவன். ஒருசமயம் சோமு கை நோட்டை நான் பார்க்க நேர்ந்தபோது, அதனை முற்றும் பார்த்து மகிழ்ந்து, அதை யாவர்க்கும் மாதிரியாகக் காட்டினேன். அந்த நோட்டைச் சோமு வகுப்பில் ஒருநாள் வைத்துவிட்டுச் சாப்பிடப் போயிருக்கும் போது, அங்கிருந்த சில யோக்கியர்கள் அதை எடுத்து மறைத்து விட்டார்கள். சோமுவந்து தேடினான். சோமு தன் கைக்குறிப்பு நோட்டைக் காணேன் என்றபோது, சிலர் கோவிந்தா.........கோ.........விந்தா! என்று கோவிந்தம் போட்டார்கள். அது முதலே கோவிந்தாச்சோமன் எனும் பெயர் தோன்றியது.

என்னவிருந்தாலும் சோமு ஒரு இளைஞன்றானே. அப்போது சோமுவின் மனநிலை எவ்வாறு இருந்திருக்க வேண்டும்? அவன்

வார்த்தைகள் எவ்வாறு வந்திருக்கவேண்டும்? ஆயினும் அவன் அப்போது கூறியதை நினைக்க, என் மனம் இப்போதும் மிக்க வியப்பையடைகின்றது. அவன் தன்னைப் பரிகசித்த மாணவர்களை நோக்கி, 'போகட்டும், ஒரு காசும் பெறாத என் அற்ப நோட்டு, யாரோ என் நண்பர் ஒருவர் கண்ணாற் பார்க்கவும், கையாற் தீண்டவும் பாக்கியம் அடைந்தது, எனக்கு மிக்க மகிழ்ச்சியைத் தருகின்றது. எனக்கில்லாமற் போயினும், என் நண்பர் யார்க்கேனும், அது, எள்ளத்தனை நன்மை தருமாயினும், யான் மிக்க பயன் உடையேன் ஆவேன்' என்றனன். இப்போது எனக்கு ஒரு நினைவு வருகின்றது. குமணன் சரித்திரம் நீங்கள் அறிந்திருப்பதே. தன் நாட்டினைக் கேட்டு வாங்கிக்கொண்டு, தன்னைக் காட்டிற்கு அனுப்பிய தன் தம்பி இளங்குமணன் என்பவன், தான் காட்டிலிருக்கவும் மனம் பொறாமல், தன் தலையைக் கொய்து வருபவர்களுக்கு ஆயிரம் பொன் பரிசு என விளம்பரம் செய்ததை அக் குமணன் கேள்விப்பட்டான்; வியந்தான். வியந்து எண்ணுகின்றான்—'ஓ என் தலைக்கு ஆயிரம் பொன்னா! (ஆட்டுத் தலைக்காவது நாலணா ஆறணா விலையுண்டாம். மனிதன் தலைக்கு அரைக்காசு கொடுப்பாரும் உண்டா?) என் தம்பி என்னிடம் வைத்திருக்கும் அன்புதான் என்னே! இந்த உலகமட்டு மன்று; மூன்று உலகங்களிலும் தேடினும் என் தம்பியைப்போல் எனக்கு இனியவர் உண்டோ! என்று கூறி வியந்து வியந்து மகிழ்ந்தான். இதனை

"வெம்புங் காலை வெதும்பி விழுஞ்சிரம்
செம்பொன் கோடி விலையெனச் சிந்தித்தான்
உம்பர் நாடு முலகினுந் தேடினும்
எம்பி போலெனக் கியாவ ரினியரே" என்ற

அழகிய பாட்டினால் அறியலாம். இங்ஙனம் உலகம் மெச்சிடுங் குமணன் செய்கை நம் நினைவிற்கு வருமாறு, சோமு, தன் நோட்டை ஒருபொருளாக மதித்தார்களென அம் மாணவர்களைப் பாராட்டியதைப் பாருங்கள்! இதுவன்றோ உண்மைப் பெருந்தன்மை! தன் நோட்டைப்பற்றிச் சோமு நேரே ஒருவரையும் ஒன்றும் கேட்கவில்லை. பரீட்சை இன்னும் ஒருவாரமே இருந்தால், நோமில்லாமையால் படிக்காமல் விட்டிருந்த ஆங்கிலப்

பகுதிகள் சில, அவனுல் படிக்க முடியாமலே போய்விட்டன. கெடுதிக்காலமாக அந்தப் பகுதியிலேதான், பரீட்சைக் கேள்விகள் வந்தன. சோமு அப்பரீட்சையில் ஆங்கிலத்தில் தேர்ச்சியடையக் கூடவில்லை.

இம்மட்டோடு இவன் தீவினைக் காலம் நிற்கவில்லை. அதே பரீட்சையில் சோமு கணக்கிலும் தேறவில்லை. அக்காரணத்தைச் சொல்ல மனம் நாணுகிறது. கணக்குப் பரீட்சையில் அவனுக்கு நேர் பின்னே அவன் வகுப்பு மாணவன் ஒருவன் இருந்தான். அவன் சோமுவின் விடைத் தாள்களைப் பார்த்து, அப்படியே பிரதி செய்யத் தொடங்கினன். இதனையறிந்த சோமு, அவனிடம் இருவர்க்கும் கெட்ட பெயர் வந்துவிடும் என்று நயமாகச் சொல்லிப் பார்த்தான். அவன், கேட்டுத் திருந்துபவனுகத் தெரியவில்லை. பார்த்தான் சோமு. வெள்ளரித் தோட்டத்தில் நுழைந்த நரிக்கும் வேலிக்கருகில் (சும்மா) கிடந்த நரிக்கும் தண்டனை ஒன்றுதான் என்பது அவனுக்குத் தெரியும். ஆகவே தெய்வம் விட்டவழியை விடட்டும் என்று, தான் மேலே ஒரு கணக்கும் போடாமல் சும்மாவே யிருந்துவிட்டான். இந்த அரைவருடப் பரீட்சையில், இங்ஙனம் பிறர் தனக்குச் செய்த தீங்கினல், சோமு ஆங்கிலம் கணக்கு இரண்டிலும் தேருமற் போனன். வகுப்பு உபாத்தியாயர், என்ன சோமு! வரவர மாமியார்......என்ற பழமொழி போலாகி விட்டதே என்று கூறும்போது, அவன் கண்களிலிருந்து தாரைதாரையாக நீர் ஓடிற்று. உண்மையை உரைப்பார் ஒருவருமிலராயினர். சென்ற பத்திரிகையில், மனத்தில் பதிவுசெய்யாமல் சும்மா எழுதிவைத்துக் கொள்வதில் பயனில்லை என்று என் கட்டுரையில் (வியாசத்தில்)* யான் எழுதியிருந்த உண்மை இப்போது அவனுக்கு நன்கு புலனுயிற்று.

சோமுவின் தீவினைக்காலம் இம்மட்டோடும் நின்றபாடில்லை. S. S. L. C. Selection என்னும் தேர்தல் பரீட்சைக்கு அவன் வரவேயில்லை. அப்பரீட்சைக்கு இரண்டு வாரங்களின் முன்,

---

* 'விலைமதிக்க முடியாத ஒருபொருள் வீணுகப்போதல்' The Petrinian Vol. I. No. I.

எங்கும் பெரு மழைபெய்து பெருவெள்ளம் தோன்றியதை நீங்கள் அறிவீர்கள். அதில் வெள்ளத்தில் அகப்பட்டுவருந்திய ஏழை மக்களைக் கரையேற்றுவதில், ஒரு இரா ஒரு பகல், ஓயாது வெள்ளத்தில் இங்கும் அங்கும் அலைந்து திரிந்ததனால், கடுமையான சுரம் வந்து படுத்துக்கொண்டான். பரீட்சை நாள் மூன்றிலும் அவனுக்குச் சுரம் 103° 104° அடித்தது. அவன் தந்தை அருணாசலம் பிள்ளை ஒரு கருநாடக மனிதர். பையனுக்குச் சுரமென்று ஒரு கடிதம்கூட எழுதவில்லை. தேர்தலுக்காகக் கூடிய ஆசிரியர்களின் கூட்ட நிகழ்ச்சிகள், இரகசியமானவை களானதால், எந்த எந்த ஆசிரியர்கள் சோமசுந்தரம் கெட்டிக் காரன் என்று சிபார்சுசெய்தவர்; எந்த ஆசிரியர்க்கு மேலுதட்டை விடக் கீழுதடு நீண்டது; எந்த ஆசிரியர்க்குத் தலை வலதுபுறம் இடதுபுறமாக இருமுறை திரும்பியது—என்பவைகளை நான் சொல்ல முடியாது. ஆனாலொன்று, அந்த நிலையிலும் சோம சுந்தரம் நல்லபிள்ளை என்ற பேச்சு வந்தது. அதை எல்லோரும் ஒருமித்து ஒப்புக்கொண்டனர். 'முதல்வருடம் தானே, இன்னொரு வருடம் நன்றாகப் படிக்கட்டும்' என்பது அங்குப் பிறந்த தீர்ப்பு. 'நல்லவர்கட்கு நிகழும் எதுவும் நன்மையே தரும்' என்பது ஆன்றோர் வாக்கு. சோமசுந்தரம் எல்லாப் பாடங்களிலும் பொது வாகக் கெட்டிக்காரன் ஆயினும், ஆங்கிலத்தில் கொஞ்சம் தளர் வான். ஒரு சமயம், அத்தளர்ச்சியும் நீங்கி, நம் பள்ளிக் கூடத்தே ஆங்கிலத்தில் உயர்ந்த மார்க்கு வாங்கும் மாணவர்க்குக் கிடைக்கும் 'மார்ஷ் மடலை'ப் பெறுவதற்கே, ஆண்டவன் திருவருள், ஒரு வருடத்திற்கு இரண்டு வருடமாக, இவ்வருடமும் S. S. L. C ல் படிக்கச் செய்திருக்குமோ என நினைக்கிறேன். இவையெல்லாம் ஒருபுற மிருக்கட்டும்.

இவ்வளவு தூரம் சொல்லியதிலிருந்து, சோமசுந்தரத்தின் பெருந்தன்மை சில வெளிப்பட்டதை நீங்கள் அறிந்து கொண்டீர்கள் என நம்புகிறேன். தன்னை நியாயவழியில் நடந்த தற்காகவும், பிறர்க்கு உதவி செய்ததற்காகவும், தெரியாமல் இகழ்ந்தும், பகைத்தும், துன்புறுத்தியும் வந்த சில மாணவர் களிடம் சோமசுந்தரம் எவ்விதப் பகைமையும் கொள்ளாமல்

பெருந்தன்மையாக நடந்து கொண்டதின் பயனாக, அந்த மாண வர்களும் சில காலத்தில் உண்மையை உணர்ந்து அவனை மெச்சத் தொடங்கினர். சுருங்கக் கூறின், இன்றையதினம் நம் சோம சுந்தரத்தின் விரோதி இவனெனக்கூறிச் சுண்டு விரலையும் மடக்க முடியாது. அரை வருடப் பரீட்சையில் கணக்கு ஆங்கிலங்களில் தேறாத காரணத்தையும், 'செலக்ஷன்' தேர்ச்சிக்கு வரமுடியாது போன காரணத்தையும் சில நல்ல பிள்ளைகளால் அறிந்த ஆசிரியர்கள் அடைந்த வியப்பிற்கும் மகிழ்விற்கும் அவன்பால் இப்போது வைத்திருக்கும் அன்பிற்கும் அளவில்லை. இறைவன் திருவருளால் அவன் இந்த ஆண்டில் S. S. L. C. பரீட்சையில் முதலில்தேறி, 'மார்ஷ் மடல்', க. த. சங்கப் பரிசு, கோபால கிருஷ்ணக்கோன் பரிசுகளையெல்லாம் அடைவானாக. சோமுவின் பெருந்தன்மையைக் காட்டும் செயல்களுள், நேரமிருக்கும் வரையில், இன்னும் இரண்டொன்றைக்கூறி முடித்துவிடுகிறேன்.

ஒருநாள் சோமசுந்தரம் வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் வரும்போது, முனிசிபாலிடி தோட்டி ஒருவன் ஒரு அழகிய நாயைப் பிடித்துக்கொண்டு, நாய்களை இராப்பகலாகச் சிலநாள் பலநாள் கத்தவிட்டுப் பிறகு கொல்லும் புண்ணிய பூமிக்குக் கொண்டு போவதைப் பார்த்து விட்டான். உடனே குடல் நடுங்க உடல் நடுங்க அவனிடம் ஓடினான். அத்தோட்டி அப்புண்ணிய காரியத்திற்காகப் பெறும்கூலி, இரண்டணாவே யாகலின், தன் பையிலிருந்த இரண்டரையணாவையும் தன் இடைவேளைச் சிற்றுண்டியையும் அவனிடம் தந்து, அவனை மகிழ்வித்து அந்நாயைப் பெற்றுக் கொண்டதோடு, அந்நாயிருந்த இடத்தினையும் அவன் வழியாகவே தெரிந்து கொண்டான். அந்நாய் கீழ்வாயிலுள்ள ஒரு பெரிய வியாபாரியின் வீட்டு நாயாம். சோமு, நேரே பள்ளிக்கூடம் போக முடியாமைக்கு வருந்தித் தன் ஆசிரியர்க்கு ஒரு கடிதம் எழுதியனுப்பிவிட்டு, கீழ்வாயிலுக்குச் சென்று நாயை வீட்டுக்காரரிடம் ஒப்பிவித்து, பின் பள்ளிக்கூடத்திற்கு வந்தான். வகுப்பில் நுழையும்போது மாணவர்கள் யாவரும் கைதட்டி மகிழ்ந்தனர். ஆசிரியர் அவன் செய்கையை மெச்சிப்பேசினர். இப்போது அவனை நாய்பிடிக்கிச்

சோமனெனச் சொல்வாரில்லை! 'நற்குண மிக்க நமதருமைச் சோமசுந்தரம்' என்று கூறிப் புகழ்ந்து மகிழ்ந்தார்கள்.

மேற்கூறிய நாய், அவ்வியாபாரியின் செல்வ மகளாகிய மீனாட்சி என்னும் ஒரு பெண்ணின் உயிர்க்குயிரான வளர்ப்பு நாயாம். அடுத்த நாள் அந்த வியாபாரி நம் பள்ளிக்கூடத்திற்கு வந்து, சோமசுந்தரம் படித்த வகுப்பைத் தேடிச்சென்று, சோமுவின் உதவியால் தன் மகளின் செல்வ நாய் தப்பிப் பிழைத்ததைப் பாராட்டிப் பேசி, சோமுவிற்கு நன்றியறிதலாகப் பத்து ரூபா விலையுள்ள ஒரு பொருள் வெகுமதியளிக்கத் தன் மகள் விரும்புவதாகவும், சோமு விரும்பும்பொருள் யாதெனத் தெரிந்துபோக வந்ததாகவும் கூறினர். சோமு, தான்செய்தது தன்கடமையே யாகுமென்றும், தனக்கு ஒரு வெகுமதியும் வேண்டாமென்றும், தன்பால் அவர் அருள் வைத்திருந்தால் அதுவே பெரிய வெகுமதி யாகுமென்றும், தன்னையொரு பொருள் செய்து பள்ளிக் கூடத்திற்கு வந்ததற்காக மிக்க வந்தனம் செய்வதாகவும் கூறினன். இவ்வினிய சொற்களைக் கேட்ட அவ்வியாபாரியின் பண்டை எண்ணங்களெல்லாம் முற்றும்மாறி, எவ்வெவையோ புதிய புதிய எண்ணங்கள் தோன்றலாயின. அதன்மேல் அவர், உபாத்தியாயரின் உதவி பெற்றுச் சோமுவைக் கட்டாயப் படுத்தி வேண்டும் பொருள் யாதென்று கேட்க, அப்போது மறுக்க முடியாத சோமு, தான் விடியற்காலம் எழுந்து படிக்க ஒரு அலாரம் கடிகாரம் வாங்கித் தந்தால் பேருதவியாகும் என்றான். அவ்வளவுதான். வியாபாரி, ஆசிரியர்கட்கும் மாணவர்கட்கும் வந்தனம் கூறிப் போய்விட்டார். மாலையில் பள்ளிக்கூடம் விட்டுத் தன் வீட்டிற்குப் போய் நுழையும்போது, சோமு, தான் படிக்கும் இடத்திற்கு நேராகச் சுவரில், 40 ரூபாய் பெறுமானமுள்ள ஒரு அன்சோனியா கம்பெனியின் சுவர்க் கடிகாரம் பள பள வென்று தொங்குவதைக் கண்டு வியப்படைந்தான். எல்லாம் திருவருட் செயலேயாகும் என்று எண்ணினன். இப்பால், அப்பெரிய வியாபாரி வைத்தியலிங்கம் பிள்ளை யென்பவர், சோமுவைப் பற்றியும், அவன் குடும்பத்தைப்பற்றி

யும் பற்பலரிடம் பலவாறு விசாரித்துக் கொண்டிருந்தாராம். அவர், ஒரு வாரத்தின் முன், திருச்சியிலுள்ள தன் தம்பி சுந்தரம் பிள்ளைக்கு 'அடுத்த வருடம் நம் வேளாள வகுப்பைச் சேர்ந்த ஒரு நல்ல பிள்ளையாண்டானைக் காலேஜில் படிக்கவைக்க வேண்டியிருக்கு' மென்றும் 'ஆண்டவன் திருவருள் கூட்டிவைத்தால் அவனே நம் மீனாட்சிக்கு வாழும் பாக்கியத்தை அடைபவனாவான்' என்றும் ஒரு கடிதம் எழுதியிருக்கின்றாராம். ஓ! ஓ! இராமசாமி மணியடிக்கின்றான்! நம்மவர்கள் மணியடிப்பது நல்ல சகுனம் என்பார்கள்! என்றோ ஒரு நாள், நம் சோமசுந்தரம் கல்லூரியில் படித்துத்தேறி, மீனாட்சி மணாளனாகத் திகழ்வதை நாம் பார்த்து மகிழத்தான் போகின்றோம்.

அன்பர்களே! இங்ஙனம் சோமுவின் நற்குண நற்செயல்கள் இன்னும் எத்தனையோ பல! உங்கட்கெல்லாம் விருப்பமிருந்து கேட்பதாயின், எந்த நேரத்திலும் அவைகளையெல்லாம் நான் மகிழ்வுடன் சொல்லச் சித்தமாக இருப்பேன்.'' வே.

---

# விலைமதிக்க முடியாத ஒரு பொருள் வீணாகப் போதல்.



எனது அன்பார்ந்த இளைஞர்களே!

நீங்கள் நாள்தோறும் செய்துவரும் எழுத்து வேலைகளிலே பலவற்றை நீங்கள் திருப்பிப்பார்க்கும் போது, அவை முற்றுமோ, அல்லது பெரும் பகுதியோ, அல்லது சிறுபகுதியோ பிழை பட்டுப்போவதை அறிந்து அவற்றை அடித்து விடுகிறீர்கள். உங்கள் அருமையான நேரமும் காகிதம் முதலியவும் வீணாக்கப் பட்டதை உணர்ந்து வருந்துகிறீர்கள். சாதாரண நாட்களில் மட்டுமல்ல; ஒவ்வொரு நிமிடமும் ஒரு மணியாக எண்ணத் தக்க பரீட்சைக் காலங்களிலும் பலப்பல வரிகளைப் பக்கம் பக்கமாக எழுதி, அவைகளை முற்றும் அடித்துவிட்டுத் தமது அரிய

நேரத்தை வீணாக்கும் மாணவர்கள் பலராவர். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மாணவனும் இங்ஙனம் ஏதோ சிலவற்றைப் பிழையாகக் கண்டு அடிப்பதும் திருத்துவதும் செய்யாதிருப்ப தில்லை. சாயுங்காலம் நம் 'இராமசாமி' கூட்டும் காகிதக் குப்பை களைக் கண்டால், நீங்கள் இவ்வுண்மையறிந்து வியப்படைவீர்கள். இக்குப்பை, கிழித்தெறிந்த தாள்களால் ஆகியது; இங்ஙன மின்றித் தத்தம் கைப்புத்தகங்களில் (Rough Notes) அடித் துள்ள பக்கங்கள் எத்தனையோ! இவ்விரு வழிகளிலும் ஒரு மாணவன் ஒரு நாளைக்கு ஒரு 'கால் தாள்' வீணாக்கினும் அன்று நம் பள்ளிக்கூடத்தில் ஏறத்தாழ கால் ரீம் தாள் வீணாகப்போகும்; ஒரு ஆண்டில் குறைந்தது 50 ரீம் தாள் வீணாகப்போகும். பென்சில், மைச் செலவுகள் வேறேயாகும்.

எனது அன்பர்களே! மேலே, யான் 'விலைமதிக்க முடியாத ஒரு பொருள்' என எழுதியதைப் பற்றி நீங்கள் ஒருவாறு எண்ணுகின்றீர்கள். அந்தப் பொருள் தாள் முதலியவற்றின் விலையென்பது உங்கள் எண்ணம். யான் குறித்தது அதுவன்று. விலைமதிக்க முடியாத என்ற அடைமொழியை ஊன்றி நோக்குங் கள். இன்னும் சற்றுப் பொறுத்திருங்கள். என்னைத் தொடர்ந்து வருவீர்களாக.

கல்விமுறை மிக எளிதாகச் செய்யப்பட்டிருப்பதாகப் பெருமை பாராட்டப்பெறும் இக்காலத்திற்குப் பத்துப் பதினைந்து ஆண்டுகளின்முன், ஒரு மாணவன், இப்பொழுது நீங்கள் வைத் திருப்பது போல ஒரு சுமை நோட்டுகள் வைத்திருப்பதில்லை. ஆயினும் அவர்கள் உங்களை விடக் குறைவாக எழுதிப் பயின்ற தில்லை. அவர்கள் எழுத்துவேலைகள் எங்ஙனம் நடைபெற்றன? பெரும்பாலும் 'சிலேட்' என்னும் கற்பலகையில் நடைபெற்றன. அதனால் அக்காலத்தில் மாணவர்கட்குக் காகிதச் செலவு முதலி யவை சுருங்கின; பள்ளிக்கூடத்திலும் இராமசாமிக்கு இவ்வளவு வேலையில்லை. மாணவர்கள் உங்களைப் போல இவ்வளவு நோட்டு களைத் தூக்கிவர வேண்டியதில்லை. ஒரு சிலேட்டின் கடை விலை (அதிகமானால்) 8 அணா என்று வைத்துக் கொள்வோம். அதன் உண்மையான விலை என்னவென்று பார்ப்போம். இப்போது

நாள்களில் நீங்கள் செய்யும் வேலைகளில் எவ்வளவு வேலைகளை அது செய்து விடுமோ, அவ்வளவு நாள்களின் விலையும் அந்தச் சிலேட்டின் விலையும் ஒன்றன்றோ? இம்மட்டுமோ! கருத்துடன் பாதுகாத்து உடைக்காமல் வைத்திருப்பவர்களிடத்தில் அது சிரஞ்சீவியாக விருக்குமன்றோ! இப்போது அதன் விலையை மதித்துப் பாருங்கள்!

நல்லது, அன்பர்களே! யான், மேலே 'விலைமதிக்க முடியாத ஒரு பொருள்' என்றதுபற்றி, இப்போது உங்கள் எண்ணம் மாறியிருக்கின்றது என எண்ணுகின்றேன். அப்பொருள் 'சிலேட்' எனும் கற்பலகை என்பது உங்கள் எண்ணமாகும். இல்லை; நீங்கள் இன்னும் சற்றுப் பொறுத்திருக்க வேண்டியவர்களே. ஒரு என்பது 'ஒப்பற்ற' என்ற பொருளில் வந்திருப்பதை நீங்கள் ஊன்றிப் பாருங்கள்.

இங்கே ஒன்று கூற விட்டுவிட்டேன். சிலேட் வேலை, இக்காலத்தில் பள்ளிக்கூடத்தில் பல வேலைகட்கு இயலாது என்பது உண்மையே. ஆயினும் 'சொல்வதெழுதல்' (Dictation) 'கணக்குப் போடல்' முதலாயவற்றிற்கு என் ஆகாது? பள்ளிக்கூடங்கட்கு வேண்டாம். வீட்டில் கணக்குப்போட்டுப் பார்த்தல் முதலாயவற்றிற்குக் கூடவா கைப்புத்தகம் (Rough Note) வேண்டும்? சிலேட்டைப் பயன்படுத்தலாகாதா? ஆகவே, மாணவர்கள், கூடிய இடங்களிலெல்லாம் சிலேட்டையே உபயோகித்தல் வேண்டும். இது நிற்க; யான் இன்னும் மேலே போகின்றேன். என்னைத் தொடர்வீர்களாக.

அன்பர்களே! 'முறையறியாத கல்விக்காலம்' என்று இக்காலத்து அறிஞர்கள் இகழும் பழைய காலத்திலே, மேலே கூறிய நாள் சிலேட்டுகளில் எழுதிப் பயிலப் பெறாததொரு காலத்திலே, எழுதிப் பயின்றதொரு அருமையான கருவி ஒன்று உண்டு. அது விலை கொடுத்துக் கடையில் வாங்குவதொன்றன்று. அதில் எழுதுவதற்குப் பென்சில் முதலிய உதவிக்கருவிகள் ஒன்றும்வேண்டாம். எழுதியதை வேண்டாவிடின் அடிக்கவோ துடைக்கவோ வேண்டாம். தூக்கிக்கொண்டுபோக வேண்டியதில்லை. எந்த விடத்திலும்

உபயோகிக்கலாம். அதில் உண்மையில் ஒன்று எழுதப்படுமாயின், அது, எந்தக் காலத்திலும் எதனாலும் அழிவதில்லை. அதில் எழுதப்பட்டதை எத்தனை பேருக்கும் உதவலாம். குறைவது மில்லை கெடுவதுமில்லை. இங்ஙனம் அதன் பெருமைகளை யெல்லாம் விரித்துரைப்பின் அது ஒரு பெரிய வியாசமாகும்; இவ்வியாசத் திற்கு எமக்குத் தந்துள்ள அளவில் அது அடங்காது. அதன் பலவகையான பெருமைகளை, அதனைப்பற்றி எழுதும் மற்றொரு வியாசத்தில் நீங்கள் அறிவீர்கள். அதுதான் யாது? அதுவே மனம் எனும் அரியதொரு நற்பலகை யாகும்.

அன்பர்களே! சிலேட்டும், தாள்களும், கரும்பலகையும் பிறவும் இல்லாத மிகப் பழங்காலத்திலே, இவைகள் யாவும் செய்யும் வேலைகளை யெல்லாம் அந்த நற்பலகை யொன்றே செய்து வந்தது. என்? இவை செய்ய முடியாத பலகாரியங்களையும் அது செய்து வந்தது. மாணவர்கட்கு மட்டுமல்ல, ஆசிரியர் கட்கும் அது அரும் பெரும் உதவிகளைச் செய்துவந்தது. நாள டைவில் அதன் அருமை பெருமைகள் அறியப்படாவாய்க் குறைந்து மறைந்து போயின. அங்ஙனம் போவதற்கு மேற் கூறிய சிலேட்டு, தாள், கரும்பலகைகள் வருதலே காரணமாயின. புதிது புதிதாகச் சில யந்திரங்கள் வர வர, பழைய முறைகள் குறைந்து மறைந்து போகின்றன. தண்ணீர்க் குழாய், நெல் லரைக்கும் யந்திரம், மோட்டார் முதலியன வர வர, பழைய முறைகளான கிணற்றில் தண்ணீர் இறைத்தல், நெற்குத்தல், நடத்தல் முதலியன குறைந்து மறைவதை நீங்கள் அறிந்திருக் கின்றீர்கள். இங்ஙனம் புதிய முறைகள் வருவதால், பழைய முறைகள் மாறுவதால் நன்மையும் உண்டு தீமையும் உண்டு. ஆயினும் எந்தப் புதிய முறையும் பழைய காலத்தில் நமக்கிருந்த நன்மைகளை மாற்றிவிட இடந்தாலாகாதென்பதே இங்குக் கூறப் படுவதாகும். எனவே, சிலேட்டு முதலானவை வந்ததால், அதற்கு முன்னுள்ள மனமெனும் நற்பலகை செய்துவந்த அரிய பெரிய நன்மைகள், குறைந்து மறைந்து போயின என்று யான்கூறினால், அதனை நீங்கள் அலட்சியம் செய்யாது உற்றுக்கேட்டு ஆராய்ந்து உண்மை உணர வேண்டியவர்கள் ஆவீர்கள்.

இனி, இங்ஙனம் யான் கூறுங்கால், என்னை எதிர்த்து நிற்பார் சிலரை யான் காண்கின்றேன். அவர்கள் கருத்து 'மனத்தால் மட்டும் எப்பெரும் வேலையும் செய்துவிட இயலாது. 4+4=8 என்று மனத்தாற் கற்றுவிடலாம். ஒரு பெரிய செய்யுளை, ஒரு பெரிய பாடத்தைக் கற்பிக்கவோ கற்கவோ மன வேலைமட்டும் எங்ஙனம் போதும்? சிலேட்டு, தாள் முதலியவைகள் இருந்தாலன்றி எப்பெரும் வேலையும் செய்ய மனத்தால் இயலாது' என்பதாகும். இங்ஙனம் அவர்கள் என் கருத்தை முற்றும் அறியாது எதிர்த்து நின்றாலும், யான் அவர்களை எதிர்க்கப் போவதில்லை. அதற்கும் உடன் பட்டு நின்று அவர்கட்குச் சமாதானம் கூறி அவர்களையும் அழைத்துக்கொண்டு மேற் செல்வேன். யான் கூறுவதெல்லாம் ஒன்றே. மாணவர்கள், உபாத்தியாயர்கள் சொல்வதை முற்றும் தங்கள் மனதில் நன்கு பதித்துக்கொண்டு, பின் அவசியமிருந்தால், அவசியமான குறிப்புக்களைத் தாள் முதலியவற்றில் குறித்துக் கொள்வதில் எனக்குத் தடையில்லை. அங்ஙனமின்றி, அவர்கள் தங்கட்குக் கற்பிக்கும் பாடங்களை மனதில் அமைக்காமலே, தாளில், சொல்வதெழுதல் (Dictation) போல் ஒன்றும் விடாமல், அந்த—அந்த ; வேளையில்—சமயத்தில்-என்றவாறெல்லாம் எழுதிக்கொண்டு போகின்றனர். சிலர் ஒன்றும் எழுதாமலே யிருந்துவிட்டு, யாரோ சிலர் எழுதுவதைப் பிரதிசெய்துகொண்டு படிக்கின்றனர். இங்ஙனமெல்லாம் மனவேலையின்றிச் செய்யப் பெறும் தாள் முதலியவற்றின் வேலையால் விளையும் தீமைகள் மிகப்பல. ஆசிரியர்கள் சொல்வதைப் பொருள் உணர்ச்சியின்றி எழுதுமிடத்து, சொற்களின் உச்சரிப்பு அறியப்படாமல் எத்தனையோ பிழைகள் செய்து விடுகின்றனர். பிழைபட எழுதிய வாசகங்களைப் பிழையாகப் பாடம் செய்கின்றனர். பொருள் உணர்ச்சியில்லாது படிக்கும் படிப்பு இலகுவில் கைகூடிவருவதில்லை. வருந்திப் பயின்றதும் வகுப்பிற்கும் பரீட்சைக்கும் பயன் படுவதில்லை. இங்ஙனமெல்லாம் பொருளுணர்ச்சியில்லாத, தாளில் எழுதிப்படித்த, படிப்பில் உள்ள குறைகளை உதாரணங்களுடன் விரிப்பின், அது விடா நகைப்பிற்கிலக்காகி விரிந்து போகும்.

இனி, 'பொருள் உணர்ச்சிக்கு மனப்படிப்புமட்டும்போதாது' என்பதும் ஆராய்ச்சிக்குமுன் நில்லாது ஒழியும். இப்பள்ளிக்கூடத்தில் சில ஆண்டுகளின்முன் ஒரு குருடர் வந்து அரிய பெரிய கணக்குகளைப் போட்டு நம்மையெல்லாம் வியப்படையச் செய்தது உங்கள் நினைவிலிருக்கலாம். நமது மானேசராகிய திருமிகு (Rev.) லாம்பு துரையவர்கள் எந்தக் காலத்திலோ போட்ட நாலைந்து அரிய கணக்குகளை, அப்படியே ஒப்புவித்து அவற்றின் விடைகளையும் கூறியது நமக்கு எவ்வளவு வியப்பைத் தந்தது! இக் குருடர் எந்தத் தாளை வைத்துப் பயின்றார்? எந்தத் தாளில் போட்டுப் பார்த்து விடை கூறினார்? தாள்களைக் கொண்டு நாம் போட்டுப் பார்த்து விடை சொல்லுமுன், அவர் விடை கூறி விடவில்லையா? அவர் எங்ஙனம் கூறினர்? நாளடைவில் தன் மனத்தில் பயின்றுவந்த பயிற்சியின் முதிர்ச்சியாலன்றோ அவர் அரிய பெரிய வேலைகளையெல்லாம் எளிதிற் செய்வாராயினர். அத்தகைய பயிற்சியை நாம் இக்காலக் கல்விமுறையில் அடைவதில்லை. அதனால் நமக்கு மனத்தின் அருமை பெருமைகள் தோன்றுவதில்லை. ஆயினும், பண்டைக்காலத்திருந்த நமது முன்னோர், இம்மனத்தின் அருமை பெருமைகளை, மனப்பயிற்சியால் அடையலாகும் அரிய காரியங்களை, அறிந்தவராயிருந்தனர். கல்விப்பயிற்சிக்கு இன்றியமையாத கருவி, சிலேட்டன்று, தாளன்று, கரும்பலகையாய நெடும்பலகையன்று, உதாரணப் பொருள்கள் அல்ல; ஊர்ப்பயணங்கள் அல்ல; இவை யாவற்றினும் சிறந்த மனப்பயிற்சியே என்பதை நன்கு அறிந்துரைப்பாராயினர். இதனாலன்றோ!

> 'சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
> வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்——'

என்று அருமையாகக் கூறுவாராயினர்.

அன்பர்காள்! பண்டைக்காலத்துத் திண்ணைப்பள்ளிக்கூடங்களிலும் இம்மனப்பயிற்சியை—நினைவாற்றலை—எட்டும் இரண்டும் அறியாச் சிறுவர்கட்கும் பலவழியிலும் கற்பிப்பாராயினர். ஒவ்வொரு நாள் மாலையிலும் ஒவ்வொரு இளஞ்சிறுவனுக்கும் ஒரு

பூவின் பெயர் கூறப்படும். அடுத்த நாள் அவன் அதனை நினை வில் வைத்திருந்து கூறுதல்வேண்டும். இங்ஙனமே இரண்டாம் நாள் ஒரு பூவின் பெயர் கூறப்படும். அடுத்த நாள் இவ்விரு பூக்களின் பெயரும் கூறுதல் வேண்டும். இங்ஙனம் மனப் பயிற்சி யால் ஆகும் நினைவாற்றல் அவர்கட்கு நாளும் நாளும் ஏறி வருதலைப் பலவழியிலும் காணலாம். அங்ஙனமே அக் காலத்து ஆசிரியர்களும் மனப்பயிற்சிகளால் நினைவாற்றல் மிகுந்து விளங் கினர். சிறுர்வகுப்பு ஆசிரியர் ஒருவர், முதல்நாள் எச்சிறுவனுக்கு எந்தப்பூக் கூறப்பெற்றதென்பதை, இக் காலத்தில் எழுதப் பெறும் 'பாடக்குறிப்பு' (Notes of Lessons) ஏதும் இன்றி, நினைவில் வைத்துக்கொள்ளும் ஆற்றல் உடையராயிருந்தனர். பழைய காலத்தே ஆசிரியர் ஆவார்க்குக் கூறியிருக்கும் இலக் கணத்தில், தாம் உரைக்கும் பாடங்களைத் தாளில் அமைத்து எழுதிவரல்வேண்டும் என்று கூறுமல், 'உரைக்கப் படும்பொருள் உள்ளத்தமைத்து' என்று கூறுவாராயினர். இம்மட்டுமோ? அதே சூத்திரத்தில், மாணவர்கள் தாளில் எழுதிக்கோள்ளுமாறு கூறவேண்டுமென்று கூறுமல், கோள்வோன் கோள்வகை யறிந்து, அவன் உளங்கோளக் கொடுத்திடுக என்றுங் கூறுவாராயினர். இம்மட்டுந்தானே! பாடம் கேட்கும் மாணுக்கர் இயல்பு கூறுங் காலத்தும், "செவி வாயாக நெஞ்சு களனுகக்--கேட்டவை கேட்டவை விடா துளத் தமைத்துக்" கொள்க என்பாராயினர். இங்ஙனமெல்லாம் ஆசிரியர் மாணவர்கள் உள்ளப்பயிற்சியின் இயல்புகள் குறித்து, இலக்கண நூலாரால் கூறப்பெற்றிருக்கும் இலக்கணங்கள் பல; அவை விரிப்பின் பெருகும்.

இனி, இங்ஙனம் மனப்பயிற்சியின் உயர்வறிந்து, அவ் வொன்றினுலேயே பயின்றுவந்த பண்டைக்காலத்தே, அவ்வழி யாலே சிறந்த கல்வியை யடைந்த பிறவிக்குருடரும் பலராவர் என்பதை யுணர்வார், என் கொள்கையினை இலகுவில் ஏற்றுக் கொள்வர். தமிழ்ப்புலவர்களாய இரட்டையரில் ஒருவர் பிறவிக் குருடர் என்பது பலர்க்கும் தெரியும்; மாம்பழக்கவிச்சிங்க நாவலர் என்பார் ஒருவர் பிறவிக்குருடர் அல்லராயினும், மூன்றும் வயதில் அம்மை நோயால் கண்ணிழந்தவர். அந்தகக்கவி வீரராகவ

முதலியார் குருடர் என்பது சொல்லாமலே விளங்கும்; இவரும் ஒரு பிறவிக்குருடர் ஆவார்; இங்ஙனமே, திருவள்ளுவாற் கண்ணென்று சிறப்பித்துப் பாராட்டப் பெற்ற அகக்கண்ணுடையார் இன்னும் சிலராவர். இவர்கள் பாடல்களைப் பார்க்கின், இவர்கள் எவ்வளவு சிறந்த புலவர்களாக விருந்திருப்பார்கள் என்பது புலனாகும். கண்ணுடையோராலும் கண்டறிந்து கூற இயலாத அரிய செய்திகளை, இவர்கள், தமது அகக்கண்ணால் நோக்கிக் கூறியிருக்கின்றனர். அவர்கள் மதி நுட்பங்களையெல்லாம் மற்றொரு வியாசத்தில் பார்ப்போம். இப்போது, அவர்கள் கல்விகற்ற நெறி, யான் இங்குக் கூறிவரும் மனப்பயிற்சி நெறியேயாகும் என்பதை அவர்களில் ஒருவர் வாக்கிலிருந்தே எடுத்துக் காட்டுகின்றேன். பின்னே கூறிய வீரராகவக் கவிராயர் தமது கல்விப் பயிற்சி நெறியைக் குறித்து, ஏடா யிரங்கோடி எழுதாமல் நன்மனத்தேழுதிப் படித்த விரகன் என்று கூறியிருப்பதைக் காட்டி, எனது கொள்கைக்குப் போதிய சான்றுகள் கூறிவிட்டதாக நினைத்து, இச்சிறு வியாசத்தை முடித்துக் கொள்ளுகின்றேன்.

எனவே, அன்பர்காள்! இச்சிறுவியாசத்தின் தலைப்பில் யான் விலைமதிக்க முடியாத ஒரு பொருள் என்றது 'மன' மெனும் நற்பலகை என்பதும், அது வீணாகப்போதல் என்பது அம்மனங் கொளப்பயிலும் பயிற்சி இக்காலத்தே குன்றிவருகின்றதென்பதும், நீங்கள் அறிவீர்கள். இனி, நீங்கள் பயிலும் எந்தப்பொருள்களையும், உங்கள் மனத்தில், பொருள் உணர்ச்சியுடன் அமைத்துக் கொள்ளப் பழகிவரவேண்டு மென்பதும் உணர்வீர்கள்.

வே.

